ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.



# அத்வைதார்த்தப் பிரகாசிகை.

## முதற்பாகம்.



### மங்கலம்.

ஐந்துமின் கரம்போலி விந்தைவீர மாதவன்
சுந்தரப் பதங்கோள இந்தநூ லிலங்குமே.

ஒரு நண்பரா லியற்றிய நூலொன்றென் கண்ணுற வெய்தியது. அதிலன்னவர் தம் மறுதலையோடு மாத்திரம் [illegible] ஸ்ரீமன் மகா தேவ அனுக்கிரக லீலா விக்கிரகராகிய சங்கரப் பெருமான் சூத சங்கிதையைப் [illegible]ன்முறை படித்துத் திருத்தி விட்டதாகப் பொறித் திருந்தனர்; அஃதவரது மையலேயாம். என்னை? சிவகுருமைந்தனர் பரமாத்வைத சித்தாந்தத்திற்கியையச் சூதசங்கிதையைத் திருத்திவிட்டதாகக் கோடில், சைவராதிய சருவமதத்தினருந் தத்தம் புராணாதி நூல்களையுந் திரிபுசெய்துகொண்டதாகவன்றோ கூறப்பெறும்; பெறவே, இவரும் இவர் முன்னோரும் இக்குற்றத்திற் கிலக்காகாது தப்புவதியாங்ஙன மென்க. அன்றியும், இவ்வாறு திரிபுறத்

தற் பாலனவாயவற்றை ஸ்ரீவாதராயணர் திருவாக்கெனப் பிரமாணமாக யாவர்தாங் கைக்கொள்வர்; கொள்ளா தொழியவே, அவர்கூற்றுப்படியாவர்தா மாத்திகராவர். அத்திறத்திரிபு நம்சங்கரப் பெருந்தகையாற்றியதென்ப தவருக்கையமா? விபரீதமா? மெய்யுணர்வா? மெய்யுணர்வெனின், அவ்வுணர் வெப்பிரமாணத்தாற் பெறலாயது; காட்சியாலெனின், அசம்பவமாதலி னஃதியையாதென்க. கருதலாலெனின், பதிஞ்ஞை ஏது திருட்டாந்தங்களை வரைவ தவர்கடன்; உரையாலெனின், ஸ்ரீவியாசாதியருரையா? தம்முன்னோருரையோ? ஆதியதேற் பொறிப்பதவர்கடன்; இறுதியதே லந்தபரம்பரா நியாயம் போலும் கட்டுக்கதை போலும் அறிஞரால் விட்டொழிக்கற்பாலதேயாம். மற்றைப்பிரமாணங்களாலெனின், வரையின் மறுப்பாம். அன்றியு மங்ஙனந் திருத்தியது யாவற்றையுமா? ஒன்றிரண்டையா? ஆதிய தேற்றாயபிரதி யிவர்க்குக் கையுற்றதியாங்ஙனம்? அந்தமேல் அச்சங்கர பரம்பரையின் மாத்திரமன்றோ நிலவுறல் வேண்டும். அஃதன்றி யச்சங்கர தயாநிதி புகழ்போல் யாண்டும் பரவியதென்கொல்? அஞ்ஞான் றஃதைத் தடுத்து மாற்றிக்கொள்வான் இவர் மதத்தினரெவரு மின்றியதென்னைகொல்? புறுவிலிட்டது அசுத்தப் பிரதி

யேலிவர் சுத்தப்பிரதியை யச்சிட்டுத் துலக்க யாவரோ தடிகொண்டு தடுத்தார். மேலுமவ்வாறு திருத்தியிருப் பிற் றமது பாரம்பரையல்லாத வேறு சயிலாய சுத்தாத் வைதபாரம்பரையிற்பொலிவுற்ற ஸ்ரீதத்துவராயசுவாமி கள் மொழிபெயர்த் தருளிய பிரஹ்மகீதையையும், இவர் கூற்றுக்குக் கூற்றாயவாற தென்னோ? இன்னணமாதலி னிவர் மையலுற்றுக் கையாடினா ரென்பதி லையமென்? இது நிற்க; இனித் திரிபுறத் திருத்திய தென்ப தியா தெனத்தெரிவாம்:—"பவுதிகயோகம் (சகுணம்), சாங் கியயோகம் (நிர்க்குணம்), அத்தியாசிரமயோகம் (வை திக் பாசுபதயோகம்) என்னும் மூன்றனுள்ளே நடுக்க ணுற்ற நிர்க்குணப் பிரஹ்மத்தை முடிந்த நிலையாகப் பிரமா வானவர் கூறி, அதனை மெய்ப்படுத்தப் பரம சிவனை ஆவிர்ப்பவிக்கச் செய்தமை எங்ஙனங் கோள சங்கரராற் புதிதாகப் படைக்கப்பட்டுப் போயிற்றோ,'' என்றார்; எனவே,

## பிரமகீதை ஐந்தாவது அத்தியாயம்.

சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்றுதிரமா யறி வதுவே, பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகருநெறி தானதுவாகு, மவமேயிதனை யொழிந்துளதா மவைதா

மிதனை யடைதற்குத், தவமே முதலாஞ் சரியைகளைச் சாற்றுகின்ற தன்மையவே. 95

என நுதலி, அதன்பொருட்டாய்:—

ஆதர முடையீர் கேண்மி னருமறைப் பொருளீ தென்றே,யோதலா லுவமை யில்லாப் பொருளிதி லைய முண்டேற்,றீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையி னிடு வே னென்று, ணுதனு யுலக மெல்லாம் படைக்குநான் முகனு முள்ளோன். 96

பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி னர்த்த, மித்தகைத் தாகும் வேறொன் றில்லையா மிதனி லுங்கள், சித்தநம் புதலுண் டாகச் செப்பினே னாணை மூன்றே, டத்தனுர் பாதந் தொட்டே யென்றன னல ரின் மேலோன். 97

அன்பரா யுள்ளீர்கேண்மி னறிவித்த பொருண் மெய் யன்றே, லென்சிர மிற்றுவீழ்வ தென்றன னிது வு மன்றி, யின்பமே யளிக்குமீச னிவ்விடந் தன்னின் வந்து, தன்பெருங் கருணையாலுந் தளர்வறப் பண்ணு கின்றான். 98

இவ்வண முரைத்துப் பின்னை யாவர்க்கு மன்பா யுள்ளோன், செய்வண மொழிந்தே யீசன் றிருவடி

சிந்தை செய்து, மெய்வண மிழந்து தாழ்ந்து பணிந்து மெய்ப் பத்தி யாலே,யவ்வண மாகித் தன்னை யழிந்தன னயனு மையன். 99

அப்பொழு தளவி லாத வருளுரு வாய வீசன்
செப்பிடு மூவ ரேத்துந் திருவுரு வுடைய சோதி
யொப்பிலா மதியுஞ் சூடி யுமையொரு கூற னாகி
யிப்படி வானோர் காணும் படியுள வியல்பின் வந்தான்.

ஆதனத்தே யிருந்தருளியபின்,—

அளவிலா வொளிய தாய வரனெழுந் தருள லுன்னித், துளபமா லுலக மியாவு மளிப்பவ னுவகை யோடுங், களமதார் கரைசேர் நாதன் கழலிணை நினைந்தப் போதே, யுளநெகிழ்ந் துருகி யொல்லை வந்தன னுணர் வின் மிக்கோன். 101

தேவர்கடுதி யான்மகிழ்ந்து திருக்கரமமைத் தருளியபின்,

சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகு, மித்தன்மைப் பொருளை யெல்லா வுலகரு மறியும் வண்ண, நித்தரா மன்ப ரேத்து நிறைந்தமெய்க் கருணை யீசன், மெய்த்தகு பொருளீ தென்றே விளம்பிடல் செய்ய லுற்றான். 110

அஃதாவது:—

உலக மியாவு முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை, யலகி லறிவா லாய்ந்திடினு மாயா விடத்து மருத்தமிதே, திலக மாய மறைதுணிந்து திகழ்த்தும் பொருளு மிதுவென்ற, னிலகுந் தன்மை யனுபவமு மிதிலோரைய முளதன்றால். 111

இது முதல், 123 வரை யுள்ளிட்ட செய்யுட்களினர்த்தங்களை யருளிச்செய்து பின் முடிபுரையாக

நானே முழுது மெனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை, யான பொருளை யருமறைதா னறையும் படியா னதனாலும், யானு மிசைத்த படியாலு மிதுவேதிடமா யுளபொருடா, ஞான மின்றி நான்முகனு முரைத்த துங்கட் குண்மையிதே. 124

இப்பொருளையப்பட்டோ ரிறப்பர்கள் கணத்தின் மெய்யே, மெய்ப்படு பொருளை யென்றும் விடுதனிச்சயம தாகு, மிப்பொரு ளையமின்றி யறிந்தவன் பவபாசத்தை, மெய்ப்பட வொழிந்து மேலா மொளியினை யடையு மன்றே. 125

பாசமோ சகனு மீசன் பகர்ந்தருள் செய்த தன்னை
நேசமோ டியன்மா றம்மை நீடுறத் தழுவிக் கொண்டு

வாசிலா வமரர் தம்மை யருட்கணு லமைத்து நோக்கிச்
சோதியா னந்த வெள்ளச் சுகரூப ராமி னென்றுன்.

என ஆதரமென்பது முதல் பாசமோசக னென்பதி ருய யாப்புகளின் மூலசுலோகங்கள் யாவும், ஸ்ரீமத் பகவற்பாத ஆசாரிய சுவாமிகளால் "சிவனேயுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே பவமே யொழிக்கும் பரமார்த்தம்" என்பதன் பொருட்டுப் பிரமாணிப்பான் புதிதாய்ப் படைக்கப்பட்டனவெனக் கூறியவாருயிற்று.

"சிவனே யுள்ளான் பிறிதில்லை" எனப் பிரமதேவர் "ஏகமே வாத்துவிதம்" நிகர்ப்ப சுவகதசஜாதி விஜாதிரகித மகாதேவனொருவனே யுளன், நித்த சுத்த புத்த சத்திய பரமானந்த வவனன்றி யிறையுஞ் சகஜீவ பரங்க ளில்லவேயில்லையென வமரர்க்குபதேசித்ததே போல் ஐயங் கொய்யவாங் கெழுந்தருளியதையல் சகித மெய்யனும், "உலகமுழுது முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை" என அப்பொருளையே ஆதியில் உபக்கிரமித்தருளி நாப்பண்ணு மப்பொருளையே நாநா விதமாய்ப் புகன்றருளி முடிவில் "நானே முழுதுமெனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை" என உபசங்கரித்தருளி முதலினு மிடையிலுங் கடையிலும்

வேதத்தையே பிரமாணமெனக் காட்டியருளி இப் பொருளேயே பிரம னுங்கட் குபதேசித்தன னென்றும், இதன் மாட்டையப்பாடின் றென்றும், ஐயமுறுவோ ரிறப்பரென்றும், ஐயமுறார் மெய்யுறுவ ரென்றும் அருளி அம்மெய்ஞ்ஞான முறுமா ருசீர்வதித் தருளினன். இவையெல்லா மிவர்க்குப் பொய்யாப் புகட்டப் பெற் றனவாயின வன்றோ! அம்ம விறும்பூதே! "சிவனுமுள் ளான் பிறவுமுளவென்று திரமாயறிவதுவே பவமே யொழிக்கும் பரமார்த்தம்" எனத் திரிபுசெய்ததனிமி த்தம் புகன்றவண்ண மெல்லா மென்னினோ இவர்க்கு முக்கனியும் பாற்சோறும் போன் மிகவினிதா யிருக் கும்போலும்! அவ்வண்ண மிவர் முன்னோ ராற்றுததி வர் அதிட்டமின்மையே யன்றோ. சிவ னுமுள்ளான் பிறவுமுள வெனவிவர் கூற்றுப்படியோ, சிலந்தி வருட வருஞ் சுகம்போற் சொல்லச் சுகமாயிருப்பினும் பின் னது வீங்கித் துன்பம் பயத்தலொப்பப் பேரிடரையன் றோ விளைக்கும்; என்னை? ஒரு தேயத்தரையனை யவன் பிரசை கண்ணுற்றுப் பூமிகள் வீடுகண் முதலன வெங் கள் பெயரால் ரிஜிஷ்டராய் எங்களனுபவத்தின்கண் ணே யிருப்பதால் அரைய! நினக்குப் பொதுக்கட்ட டங்களும் ரோட்டுகளும் ரோட்டுக் குழிகளும், குப்பை

மேடுகளுமே யுரியனவென வறைவனுயின் என்கதி யுறுமோ அக்கதியுறுவதி லியாதையமென்க;

அன்றியு மிஃதியாங்ஙனந் தானேனும். பதி, விபு; பசுக்கள், நாநா வொடு விபுக்கள்; பாசமு மங்ஙனே. நாநாவிபுக்கள் சத்தியமாயிருக்குமாறுற்றுவா னுன்முக னுனு மொல்லுங் கொல்லோ! இவ்வுடலமெவன் போக சாதனமாம்; யாவருமிவ் வுடலத்துறைவதான்,ஒருவனு க்கே முற்புறக்கலத்தே செய்ததால் வந்ததெனின்,ஆங்கி வரிலரோ. அபிமானமவனுக்கே யெனின், மற்றெவர் க்கு மிலையோ? அதற்குமுன் முற்காயங்களுடும் இன் னணமே யுறலாலனவத்தையாதலின். இஃதொன்றே! இத்திற வளவிறந்த தோடங்களாம். இது விடயத்தி லிவர் ஆயுளளவும் முயலினும் குற்றங் குற்றமேதான், எம்முறையானும் நூக்கலேலவே யேலாதெனத் திர முற வுணர்தற் பாற்றும்.

இதுநிற்க; இன்னமொருவிந்தை;அஃதாவது வரு மாறு:—

"[இந்திரத்தியும்நர் கூர்மரை (நாராயணரை) நோ க்கி, சுவாமி] மூவிதபாவனைகளையும் எனக்கு அருளுக" என்று வேண்ட "(நாராயணர்) முதலாவது பாவனை

என்விஷயம் (சகுணவிஷயம்), இரண்டாவது பாவனை அவ்வியக்தம் (நிர்க்குணம்) பற்றியது, மூன்றுவது பாவனை முக்குணங்களைக் கடந்த பிராம்மிபாவனை; இம் மூன்று பாவனைகளுள் ஒன்றை யறிஞன்பாவிக்க" என் றும், "அசக்தன் (சகுணபாவனையாகிய) முதலாவது பாவனையையே ஆசிரயிக்க எனவைதிக சுருதி கூறிற் று" என்றுங் கூர்மர் இந்திரத்தியும்நர்க்கு மூவித பாவனைகளைத் தொகுத்துக்கூறி யருளி முதலாவது பாவனை யின்னதென உரைத்தருளினர் என்றார்.

முற்புகன்ற அத்தியாசிரம யோகத்தையும் மேற் புகன்ற பிராம்மி பாவனையையும் ஏகமென வேறவிவர் "பாஞ்சராத்திரம் சகுணமாக, பாசுபதமும் சகுண மாக நடக்கனுற்றது சந்நியாசியாரது மாயாவாத நிர்க் குணப் பிரமமாம்" என்றார்.

குணங்கடந்த பிராம்மிபாவனை யானது பாசுபத சகுணமாயது யாங்ஙனம்? அன்றியும் "அத்தியாசிரம" மென்னும் பதத்திற்கு, அதி, பூசையில் என்னும் ஸ்ம ரணமிருத்தலின், அத்தியந்தம் பூச்யதம ஆசிரமத்தை யுடையான் பரமஹம்ச சந்யாசி, அவனேயத்யாசிரமி யென ஸ்ரீமத் பகவற்பாத ஆசார்ய சுவாமிகளும், சர்

வோற்கிருஷ்ட ஆசிரமமுடையான் அத்யாசிரமியென மகா யோகீஸ்வரராகிய ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும், அந்தியாசிரமியெனப் பாடபேதம் வைத்துச் சந்யாசியென நாராயணமூர்த்திகளும், அதி, பூசையில் என்னும் ஸ்மரணத்தால், அத்தியாசிரமம், சந்நியாசாசிரமம், அதனினும் பரமஹம்ச ஆசிரமமென விஞ்ஞானபகவானும், பகுதிபத பதார்த்தமுறையாய்ப் பொருளருளியிருப்ப, அஃதை மிச்சையெனமருண்டு எப்பகுதி விகுதிப்பாகுபாட்டா லிவர் அத்தியாசிரம பதத்திற்கு வைதிக பாசுபதமெனப் பொருள் கொண்டார்? இது தானுமையலற்ற மெய்ஞ்ஞானம்! விஞ்ஞானமயகோச விஹீனர்தா மிதனைமெச்சுவர்.

"குணாதிகா" என்னும் மூலபதத்திற்குக் குணங்களைக்கடந்ததெனப் பொருள் கோடக்கிடப்ப அஃதையொழித்து முக்குணங்களைக்கடந்த வென்றார் எனின், குணத்திரயமின்றேனும் சர்வஞ்ஞத்வாதி கல்யாண குண விசிஷ்டமாய்க் கோடலெளிதென்றே! அங்ஙனமியையாதாம்; என்னை ? சர்வஞ்ஞத்வாதியாவும் சுத்த சத்துவ காரியமே யாதலினென்க. மாயாகாரியத்தை மாயைகடந்ததில் வைப்பது மதிமான்கள் கொள்கையன்றாம்; ஆகவே, முதலது:—சர்வஞ்ஞத்வாதி

கல்யாண குணவிசிஷ்ட காரணப் பிரஹ்மோபாசனை யேயாம். அற்றேல் சகுணமூர்த்தோபாசனையிருப்ப இதனை நுதலிய தியானங்ஙனங்கூடுமாலோ வெனின்? அற்றன்று; முதலாவது பாவனை என் விஷயமென நாராயணர் திருவருள் செய்தமையானும், யானென் பதற்குச் சருவபூதாந்தர்யாமியாய பரமேச்சுரன் யான் என வருளினமையானும், இறுதியத்தியாயத்தில் இத னினு மசக்தன் ஹரனையும் விஷ்ணுவையும் பிரஹ்மா வையு மர்ச்சிக்கவென உண்மை யானுமென் றுணர்க. இடையது:—விஜாதிய விருத்திரகிதசஜாதீய விருத்திப் பிரவாஹ வடிவதனுமானசியென்னும் மூன்றும் பூமியிற் றோன்றும்நிதித்தியாசனமாயநிர்க்குணத்தியானமாமெ ன்பதுடன்பாடேயாம். என்னை? தமத்திற்கப்பாற் பட்ட தாயும், சோதியாயும், அக்ஷரமாயும், நித்தியானந்த மய மாயும், அவ்யயமாயும், ஏகமாயும், பரப்பிரஹ்மமாயும் இருப்பதியாதோ அதுபரத்தினின் றும்பரதரதத்துவமெ னக் கூறியருளினமையானும், சுத்தாக்ஷர அவ்யக்தமே காரணமெனக்கழறியருளினமை யானும், மற்றவற்றானு மென்க. இனியிறுதியதோ: நிர்விகற்பப்பிரஹ்மோபஸ்தி திவடிவசத்துவாபத்தியென்னும் நான்காம் பூமியிற்றோ ன்றுநின்ற சமாதிவடிவதாம்; இஃதிருநிருவிகற்பசமாதி

வடிவமாய் ஆசானருளா லறிதற்பாலதாம். இஃதிங்ஙனமாக, இவர் ரிபுகீதையில் நானே சுத்தான்மாவென்பனவாதிய வற்றாற் பாவிக்கவென நடுக்கணுற்றதாய நிர்க்குண பாவனையையே புகன்றிருக்கின்றதென்றார். இது பொருண்மா றுட்டாம்; யாங்ஙன மெனின்?

நுதலுதும்:—ரிபுகீதை நானே சுத்தான்மா என்பன வாதிய நிர்க்குண அனுசந்தானத்தாற் பாவித்து நிர்விகற்ப பிரஹ்மோப ஸ்திதி பெற்றுச் சாக்ஷாற்கார முற்றுப் பரமானந்த நிலையெய்த உபதேசித் திருப்ப, பாவித்து என்னு மெச்சத்தைப் பாவிக்கவென வியங்கோளாக்கிப் பொருண்மாறுட்ட மியற்றியது இவர் மேன் முற்றினுங் குற்றமாகாதெனக் கற்றவர் சொற்றிடுவரா? இனித் தப்த பரசுதாங்குவ லெனச் சதுர்முகன் சாற்றியதூஉம் இந்நிர்க்குணபாவனை யென்னும் நடுக்கணின் பொருட்டேயென்றார். இதுவும் மருட்சியேயாமென்றுணர்க; தப்தபரசு தாங்குவலெனச்சதுர்முகன் சாற்றியதூஉம் சாத்தியபாகமாய பிராம்மிபாவனையின் பொருட்டேயன்றி நிர்க்குணபாவனையின் பொருட்ட தன்றாதலின். "சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமாயறிவதுவே" என அசம்பாவனை விபரீதபாவனை யற்றதிரமாய அபரோக்ஷ ஜீவப்பிரஹ

மைக்கிய சாக்ஷாற்காரமே நவின்று இஃதே பவத்தை யொழிக்கும் பரமார்த்தமென்று நுதலியதை மதமாற் சரியமின்றி உய்த்துணர்ந்துபொருள் கோடின் யாங்ஙன மிரண்டாவதன் பொருட்டதாம்? இதுபிரமாணமாயது தா னிவர்க்கு யாங்ஙனம்? இனி "ஆசிரிய ராற்றியரு ளிய உபதேசத்தாற் பிரஹ்மசாக்ஷாத் காரமும் அவித் தியா நிவிர்த்தியும் கூறப்பட்டன" என வித்தியாரண் ணியர்முடித்துக்கூறியதூஉம் இவ்விரண்டாவதாயநிர்க் குண பாவனையின் மாட்டேயென்றார். இதைப்போற் குற்ற மிவர் மேல் வேறுளதென விவேகிகள் விள ம்புவரா! இவர் எந்த வேதாந்த ஆசிரியர்மாட்டிதனைக் கற்றார். ஷை ஸ்ரீவித்தியாரண்ய முனீந்திரர் முடித் தோதிய சாக்ஷாற்காரம் இவர் கூற்றுக்கிையைய நிர்க் குணபாவனையின் பொருட்டதன்றாய்ப் பிராம்பிபாவனை யின் பொருட்டதேயாம்; நிர்க்குணபாவனையாற் பரமா னந்தவடைவெய்தாதென்பதொருதலையே யன்றே? அவித்தையின் நிவிர்த்தியானே பரமானந்தம் பிராப்தி யாதலின். அவித்தை யெனினும் மாயையெனினும் மோகமெனினும் பொய்யுருவியெனினும் தமமெனி னும் அஜையெனினும் பிரகிருதியெனினும் பிரதான மெனினு மொக்கும்.

இப்பிராம்மி பாவனை யெய்தியோனையே கூர்மபுராணம் "யாவன் ஆன்மா அபரபரியாய பிரஹ்மத்தின் கண்ணே ரதியாவனோ,நித்திய திருப்தனோ, மஹாமுனியோ, சம்யக்தரிசன சம்பன்னனோ (நற்பிரஹ்மதரிசன முற்றவனோ) அவன் யோகி பிக்ஷுவென்று நுதலப் பெறும்" எனக்கூறியது. அன்றியு மிறுதியத்தியாயத்தில், "அவ்வியக்தவடிவமே யிச்சேதனுசேதனவுலகம், அஃது ஈஸ்வரன் பரப்பிரஹ்மம்,ஆதலின் பிரஹ்மமயம் உலகம்" எனக்கூறினமையின், அவ்யக்த விஷயமாயதூஉம், பரப்பிரஹ்மாபர பரியாய பரமேசுவர விஷயமாயதூஉம் ஒன்றேயெனக்கொள்க. அற்றேல், அக்ஷர பாவனையெனவும் பிராம்மிபாவனை யெனவு மிரண்டாய்ப் பகுத்திருத்தலின் ஒன்றென்பது யாங்ஙனமெனின் ? உண்மையே! ஆயினும் தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை யெனப்பெயரிய நான்கு பூமிகளின் மாட்டுள்ள விருத்திகட்கு ஒரு சிவமே விஷயமாயினும்,எங்ஙனம் வேற்றுமையோ அங்ஙனமே விருத்தியுண்மை,சூக்கமித்துபஸ்திதியென்னுமிருபகுப்பாற் பாவனை யிரண்டாய்ச்சாதனமாயுஞ் சாத்தியமாயுமாய தென்றுணர்க. அன்றியும், கூர்ம புராணம் மூதலோத்தில்

" ஆத்மந்யாத்மான மந்விக்ஷ்ய ஸ்வாத் மந்யேவா கிலம் ஜகத், ஸம்ப்ராப்ய பாவனு மந்த்யாம் ப்ராஹ்மீ மக்ஷராபூர்விகாம்" என்னும் சுலோகத்திற்கு " தனக்கு மெய்ப் பிரமம் விடயமா யிராமற் ருனதன் சாட்சியா யிராமற், றனிற்பிறி தறத்தா னுகவப் பாத்தை யறிந்த வன் ருனறிந் தவனுந், தனிற்பிறிந் தறியா தவனறிந் தவனு மறிந்தவன் ருனறிந் திலனு, முனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வின் றுணர்வுரு தமக்குணர்ந்தது வாம்" என்றும், " தர்க்க மானநம் தாஞெழியத் தானு யுள்ள பேரொளியை, மிக்க கர்த்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப், பொக்க மறவே றறக்கண்ட பொ ழுது புரைதீர் பொருளான, தக்கபிரம தத்துவத்தைக் கண்டா னுகுந் தானுக." என்றும் கேனுேப நிடத முத லியவற்றில் அனுபூதி யறைநெறி முறையே, ஆத்மன் யாத்மான மன்வீக்ஷ்ய - பூரணமாய தன்பாற் றன்னைத் தரிசித்து, ஆத்மன்யே வாகிலம் ஜகதன்வீக்ஷ்ய - பூன்ற மாயதன் மாட்டே சருவ சகத்தையும் வேறறக்கண்டு வாதனையின் கோதையுங்காதி, அக்ஷர பூர்விகாம் - நிர்க் குண உபாசனையாற் பெறலாய அஃதாவது விளம்பிய விஜாதி விருத்தி விவதான ரகித சஜாதிய விருத்திப் பிரவாகவடிவ அல்லது சவிகற்பசமாதி வடிவ அக்ஷர

பாவனையாற் பெறலாய, பாவனுமந்த்யாம் பிராஹ்மீம்-மூன்றாவதாய் முன் மொழிந்த பிராம்மி பாவனையை, சம்ப்ராப்ய - நன்குறப்பெற்று; என்று பொருள்கோடல் முன்பின் முரணின்றி யெளிதிற்கிடப்ப நம்மன்பர் "(பாசுபத யோகநெறி யானே) ஆன்மாவிலே அருட் பராசத்தியோடு பரமான்மாவாகிய சிவபெருமானைக் கண்டு, பின்னர்த்தனக்குப் பரமான்மாவாயுள்ளவரிலே உலகமனைத்து மிருப்பனவாக நோக்கி இங்ஙன மக்ஷர பாவனை பூருவகமாக (நிர்க்குணோபாசனைவாயிலாக) எய்தும் இந்த இறுதியாகிய பிராம்மி பாவனையை யடைதலாம்" என்று வலிந்து பொருள்கோடல் யாண்டையது தென்க.

பாசுபதயோக நெறியானே என்பதனையும், ஆன்மாவிலே யருட்பராசத்தியோடு பரமான்மாவாகிய சிவபெருமானைக்கண்டு என்பதனையும் எவ் வொற்றுமையாற் கோடல்கூடும்.

அன்றியும், பாசுபதயோகநெறி யென்பதியாது? அதனு லெய்தும் பயன்யாது? அதனை யெய்தும் வகைதான் யாது? இதனை விரிவாக வரைவாராயின் மாறுவதை மறுப்பாம்.

"ஆன்மாவிலே அருட்பராசத்தியோடு பரமான்மாவாகிய சிவபெருமானைக் கண்டு" என்றாரே, இருந்து காணலா? அல்ல தில்லாமற் காணலா? ஆதியதென்னின், விபுவாய ஆன்மாவிலே, விபுவாய அருட்பராசத்தியாரும் விபுவாய பரமான்மாவும் இருப்பது யாங்ஙனம்? ஒன்று நிறைந்து நிற்ப அற்பமாய வேறு சற்பதார்த்தம் வேற்றிடத் திருப்பதே சுருதியுக்தியனுபவங்கட்கு முரணாக, நிறைந்துநின்ற அதன் மேலேயே இரண்டு விபுபதார்த்தங்கள் நிறைந்து நிற்கின்றன வென்றால் பதபதார்த்த வாக்கியார்த்த முணர்ந்த நிபுணர் நகையன்றோ செய்வர்.

ஏகதேசத்தி லிருக்குமெனின்? அவ்விபுக்கள் சுருக்குற்றது யாங்ஙனம்? அதுவுந் தம்மாலா? பிறவாலா? என அளவிறந்த தோடங்கள் மேன்மேலும் வருமாதலின் இதனை முன்பின் ஆராயாது வரைந்தது ஸ்ரீசாம்பசிவ லீலாவிக்கிரகமாகிய ஸ்ரீபூஜ்ய பகவற்பாத ஆசார்ய சுவாமிகளிடத்துற்ற குரோதமே யாம்; இன்றெனின், நிந்தித்த பாதகமேயாம். அஃதன்றியும் அருட்சத்தியோடு விரவிய பரமான்மாவா? விரவாததா காணப்பெறுவது? முதலதேல், சம்பந்த மின்றிச் சம்பவியாதாதலின், இன்றியமையாத சம்பந்தமும் சாவயவமின்

றிச் சம்பவியாதாதலின்; சாவயவமேல் கடாதிகடுப்ப வழிவெய்து மாதலின், பிள்ளை வரத்திற்குச் சென்று புருடனைப் பறிகொடுத்ததுபோலும் வட்டிக் காசை வைத்து முதலிழந்தாற் போலும் விரவவிழைவுற்று விமலை விமலர்க்கே யழிவுதேடுதல் விவேகியர்க் கழகாமா? எஃதெவ்வா றுறினு முறுக; நாம் பிடித்தது முடிந்தாற்சாலுமெனின்? நாத்திகராகாமற் றப்புவ தெங்ஙன மேலும்? தாம் கெட்டது மல்லாமல் தம்மை நம்பினோரையும் தாம் கொண்ட நன்னூலையும் அவ்வாறாக்குதல் கற்றவர்க் கெழிலா? இத்துணைத் தோடந்தாரு விவரைப் பற்றலுற்றது, பரிச்சின்னப் பொருட் கட்கன்றி யொற்றுமை யெய்தாதாதலின் பரிச்சின்ன மாயு மிவர் கைப்பட்ட சிவனுஞ் சிவையுமாய்வ ரன்றோ! அந்தோபரிதாபம்! மற்றதேல்? தனித்தனி யுற்றவவ் விருவரும் பரிச்சின்ன மாகாது விபுவாவது யாங்ஙனம்? பரிச்சின்னமாகவே யழியாமற்றானிருப்பது யாங்ஙனம்? அழியின் நாத்திகதோடம் வாராமலிருப் பதுதா னியாங்ஙனம்? அம்மஅம்ம! அயலாரும் அயலாரும் வாதாடத் தாம் இடையில் ஒருவர் பக்கத்துணைவர் போல் வந்தவர்மற்றவரையன்றோ வாதுக் கிர்க்கவேண்டும். அஃதொழிந்து ஸ்ரீ ஜகதீசாவதாரமெனக் கூர்ம புராணமும் வாயுபுராணமும் சிவரகசியமும் பிறவுங்

கூறும் ஸ்ரீமத் சங்கரதேசிகனை யிகழ்ந்த பெரும்பாதக மன்றோ விவரை யிப் பேரிடும்பைக்குட் படுத்தியது. பரிதாபம்! பரிதாபம்! ஒற்றுமையே யொல்லாததாக வே அதனுட் பிரிவாய சமவாயாதி கைமுதிக நியாயத் தாற் கண்டிக்கப்பட்டவாறு காண்க. எடுத்தவிடயம் வேறாதலின், விரிக்கிற் பெருகுமெனுங் கருத்தாற்சுருக் கினமென வுணர்க. இனி, கண்டு எனக் கழறப்பெற் றதே. காண்படுதக்காரணத்தால் அக்காரணத்தைச் சற்று இளப்பில் விடைதருதும். காணக்கூடாததென அள வின்மறைமுதலவாய மானங்களிருப்பதால் சிவங் காட் சிப்பொருளாமா? ஆமேற் கடங்கடுப்பக் கழியாதா, கழியின் முற்புகன்ற முறை நாத்திகத்வ மன்றோ வெய் தும். காணக்கூடாத தென்பதற்குப் பிரமாணங் கூறு தொழிந்த தென்னை கொலோவெனிற் காட்டுதும்:—

கைவல்லியோபநிஷத்-சிந்திக்கக் கூடாதவராயும் காணக்கூடாதவராயும் இருக்கிற பரமேசுவரரை. என் னைப் பூரணமாக அறிபவரில்லை.

நிராலம்ப உபநிஷத்-சுத்தம், சிவம், சாந்தம்,நிர்க் குணம் இந்தச் சப்தங்களால் சொல்லத் தக்கதாயும், வாக்குக் கெட்டாததாயும் இருக்கிற சைதன்னியமே பிரஹ்மம்.

ஆன்மபோதோபநிஷத்-நான் ஊகத்தினுல் அறியப்படத்தக்கவனல்ல.

நாரத பரிவிராஜகோபநிஷத்:— இந்திரியங்களாலறியக்கூடியதல்ல, ஊகத்தினுலறியக்கூடியது மல்ல, கருமேந்திரியங்களாற் கிரகிக்கக்கூடியதுமல்ல, நிரூபித்துக் காட்டத்தகுந்ததுமல்ல, நினைப்புக் கெட்டினதுமல்ல, இணையிட்டுக் காட்டத்தக்கதுமல்ல, சுவானுபவத்தினுனேயே அறியத்தக்கது.

முண்டகோபநிஷத்:—அது (பிரமம்) பெரியதாயும் திவ்யமாயும் மனத்தினுலும் எட்டிமுடியாத ரூபத்தையுடையதாயும்-அது(பிரமம்) கண்களாலாவது வாக்கினுலாவது மற்ற இந்திரியங்களினுலாவது கர்மத்தினுலாவது கிரகிக்கப்பட மாட்டாது. அது (பிரமம்) அதிருசியம், கிரகிக்கக் கூடாதது என்பனவாதிய மானமென மதிக்க. இன்னும், காணவேண்டினும் அவ்விருவரும் யாண்டிருப்பது, இவன் யாண்டிருந்து காண்பது என்பனமுதலிய கடாக்களும் நிகழுமென்க.

இஃதன்றியுந் தனக்குப் பரமான்மாவென்றனரே தானும்விபுசச்சிதானந்தம், பரமான்மாவும் விபுசச்சிதானந்தம், இவ்விருவர்க்கும்வடிவத்தாலுற்றபேதம் யாது?

பாசத்தால் மறைப்புறலும் உருமையுமெனின்? இருந்த சச்சிதானந்தமே பாசத்தால் மறைப்புற்றதாகவேண்டும். அன்றுயினே தான் அகிருதசடதுன்ப வடிவினனாய் அபசித்தாந்தம் வருதலின். இஃதொன்றே மறைப்புறற்கெதிர் மறையுமன்றேவேண்டற்பாலதாம். இனி மறைப்பென்னியற்கையா? செயற்கையா? ஆதியதெனின் நீங்குதல் யாங்ஙனம்? நீங்காதொழியவே சிரவணாதிகளருளிய வேதாகமங்கள் பயனில் கூற்றை மருவாதொருவுமா? அவற்றை மிகு துன்புற்றுப் புரிந்து தான் என் பயன்? இத்துணை மாத்திரந்தானோதோடம், முயன்று தவமாற்றிய முன்னோரும் வீணரென்றன்றேமதிக்க வரும். செயற்கையெனின்? எச்செயலான் மறைப்பாயதோ அச்செயல் யாது? அதற்குத் தானென்கொலோ காரணம்? மேன்மேனேக்க அனவத்தையன்றிப் பொருடுணியுமா றின்றும். மேலும், முன்னுமின்றிச்சிவஞானம் வந்த ஞான்றுமின்றி ஆதியந்தங்களிலிராதது இடையினுமிராதென்னும் நியாயமுறையே மிச்சை யெனப்பட்டுத் தங்கொள்கையேவிடலாம். இன்னணமாக எத்துணைப் பேதமுணர்ந்திவர் தனக்குப் பரமான்மாவென்றனர்; இஃதன்று பொருள் மற்றெனின், அஃதிஃதென விரிப்பின் மறுப்பாம். இனி "அத்தகையபரமான்மாவாயுள்ளவரிலே உலகமனைத்துமிருப்பனவாக நோக்

கி'' என்றூர். இப்பிரபஞ்சத்தை முன்னம் யாதின்பாலுளதெனநோக்கியிருத்தலாம்.அச்சிவத்திலேயேயெனின்? இஞ்ஞான்றதனை நோக்கலிற்பெறுவதென்? முன்ன நோக்குழி யென் பெறலாயதோ அஃதை யன்றி இவ்வுழியெய்துஞ்சிறப்பு இறையுமின்றுமன்றே? தன் விபு வடிவிற்றான் நிகிலவுலகும் நிற்றிலாததென் கொண்டோ! அன்றியும் உலகிருப்பதாக நோக்கப் புறவகக் கரணங்களன்றே அவாவப்பெறும்; பெறவே, பிராம்மி பாவனையைப் பெற லக்காற் கூடுமா ? கூடுமெனின், அந்நிட்டை வாய்நிட்டையே யன்றி உண்ணிட்டையாகா; என்னை? திருசிய நாட்டமின்றிச் செல்லுங்கால் திருசிய நாட்டமுண்டென முரணுதலினென்க. அற்றேல் தாம் பொருட்படுத்துழியும் வேறறக்கண்டென விளம்புதலாற் குற்றமிருபாலு மொற்றுமையாமாலோவெனின்? அற்றன்றும்; திருசியவிஸ்மரணமே கூறித்தன்மயமாய் நோக்கிவாதனைக் கோதைக்காதி நிர்விகற்போபஸ்திதி யுறப்புகன்றிருத்தலின். அற்றேல் சடமாய்ப்பரிச்சின்ன மாயதைச் சித்தாய்ப்பூன்றமாய்ப் பார்த்தல்தான் யாங்ஙனமியையுமாலோவெனின், உண்மையே! சடமாய்ப்பரிச்சின்னமாதலின் மித்தையிவ்வுலகாதலினானும், மித்தையாயவிதற்கு அதிட்டானத்தைத் தவிர்த்தயற் சத்தை

யின்மையினாலும், அதிட்டானமாய பரிபூரணதன்மய மிவ்வுலகெனப்புகல யாதுகொலே யம்! இஃதேதன்மய திருட்டியாற்பெறும் மனோலயமாம். இதன்வாதனையற லேவாசனாக்ஷயமென்ப.

இனி "இங்ஙனமக்ஷரபாவனை பூருவமாக (நிர்க்குணோபாசனைவாயிலாக) எய்தும் இந்த இறுதியாகிய பிராம்மி பாவனையை யடைதலாம்" என்றார்; எனவே, முற் புகன்றபடி சகுணபாசுபதயோகிற்கு இந்நிர்க்குணோபாசனை சாதனமாயதெங்ஙனம்? ஸ்ரீதீக்ஷிதயோகியரைச்சிரமேற் கோடுமிவர், ஷை ஸ்ரீதீக்ஷிதயோகியர் ஸ்ரீநீலகண்டபாடியத்திற் காற்றியருளிய சிவார்க்கமணி தீபிகையின் பீடிகையில் "மறைமிருதியிதிகாச புராணங்கட்கும் ஆசார்யரத்தினங்களாகிய ஸ்ரீசங்கராதிகட்கும் நிர்க்குணப் பிரஹ்மத்தின்மாட்டே தாற்பரியம்; அங்ஙனமாயினும் ஸ்ரீமகாதேவசகுணோபாஸ்தி யின்றி யது பெறலரிதாம்" என்றருளியிருப்பதால் சகுணோபாஸ்தி, நிர்க்குணோபாஸ்தியின் சாதனமாய் அதுவும் நிர்விகற்பப்பிரஹ்மோபஸ்திதிவடிவப்பிராம்மிபாவனையின் சாதனமாய்ப் பரம்பராசாதனமெனப்பெறலாகின்றது; ஆகவே,இவர் கூற்று முற்றினும் முரணாய் ஸ்ரீதீக்ஷிதயோகியருமன்றோ இவர்க்குப் பூர்வபக்கியாமாறுநேரும். அற்

றன்றஃறோர்பிரக்ஷிப்த (கலந்த) சுலோகமென வறைபி ன் அஃதேலாதாம்;என்னே? இவர் பெரியாரென்றும்பிர மாணமென்று மொப்புறுமகான்கள் வாக்கியங்களேயும் மறைபாதி நூல்களேயும் நாம்பிரமாணமாய் எடுத்துக்கா ட்டின், அவற்றை யெல்லாம் பிரக்ஷிப்தமெனின், இவர் நம்மைப்பிரமாணங்கேட்பதே யநாவசியமாம்விவத்தையு மின்றும் உத்தரதேயத்த ஆரிய சமாஜரையுமொக்கு வர். அஃதாவது:—அச்சமாஜத்தார் வேதத்தில் மந்திர பாகம்பிரமாணமென்பர்;பிராமணபாகமன்றென்பர், அன் றியுமிருடியர் மொழியும் பிரமாணமென்பர்; மூர்த்திபூச னசிராத்தாதியுமொப்பார்; மேற்கூறிய பிரமாணங்களி லேதாவதொன்றைப் பிரமாணிப்பினோ இது போப்பு கள் புசிப்பான் புகட்டியதென்பர், போப்புகளெனின் புரோகிதராதியரென்ப தவர் கூற்று. மேலு மாராய்வுழி, நிர்க்குணோபாசகன் அதற்குமேலாய அதி சூக்குமபிர ஹ்மோபஸ்திதியுறுவதா? அதற்குக் கீழாயஸ்தூலசகு ணோ பாஸ்திக்கண் வருவதா? இதனை யிவரே ஊகித் தறிக. இது வரையிவர் அதிமதிமா னென்றன்றோ விருந்தோம் இஞ்ஞான்றன்றோ இவர் மதியளவறுக் கப்பெற்றது. இது வடநாட்டில் சித்தாந்த கௌமுதி யோதிப் பலர் இரகுவம்சம் படிப்பதேபோலு மென்க.

அல்லது மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோகம் என்னும் நிதித்தியாசன வடிவ பஞ்சகத்துள் மகாயோகங் கைவரச் செய்தான் பாவயோகத்தின் முயலமேலேபோலுமாமெனக. சகுணோபாஸ்தியின் பலம், நிர்க்குணோபாஸ்தியின் பலசாதனமாய் அப்பல வடிவ பிரம்மியின் பலமன்றேல், துறக்காதியுறழ அழிவையேயெய்தும். எங்ஙனம்:—மகாதிய தொழில்கள் நிட்காமியமாய்ச் சித்த சுத்திவாயிலாய் நாற்சாதனவாயிலாய்ச் சிரவணாதிவாயிலாய் ஞானவாயிலாய் மோக்கம்பயக்காதேல் அழிவாய பலத்தவாமோ. ஆதலிற் சகுணோபாஸ்தியின் சாதனமாய் நிர்க்குண உபாஸ்தியை இவர் கூறியது முற்றினுங்குற்றமாமென மறுக்கற்பாலதாம். இன்னுமிவர்பரமயோகமென்றதூஉம் தகாதென்க; என்னை: இவர் நுதலியது சாதனமேயாதலின். பரமயோகமென்பது ஸ்ரீகணேச கீதை திரிமூர்த்திகள் கீதை அவற்றிற்கு மூலமாய உபநிடதங்கள் முதலியவற்றை யுய்த்துணரின்ஜீவப்பிரஹ்மைக்கிய வடிவநிர்விகற்பப்பிரஹ்மோபஸ்திதியென்னவேபெறப்படுகின்றதன்றிக் கிஞ்சிலும் வேறில்லை யென்றுணர்க. இன்னும் "ஏகராகிய சிவபெருமானைக் காண்கின்றான்" என்றார். காண்கிற் றிருசியமா யழிவரென்றும் அதனு

ஞத்திகம் எய்துமென்றும் முன்னே சொன்னும். எக்கரணத்தால் யாண்டிருந்துயாங்ஙனம் எனவியம்பின்விடை தருதும். இன்னணம் றதலியவற்ருல் சிவனே யுள்ளான் பிறிதில்லையென்று திரமாயறிவதுவே'' என்பது நிர்க்குண பாவனையாய இரண்டாவது பாவனையன்ருய் மூன்ருவதாய பிராம்மி பாவனையேயாகி முடிபெய்திய தென வதி திடதரமா யுணர் தற்பாற்ரும். இஃதிங்ஙனம் துணியப்பெறவே நம் மன்பரு மினிக் கள்ளச் சத்தியத்திற் கயனையாளாக்கிஞரென்பதை அதி தூரத்தகற்றி மெய்யுணர்வுற் றுய்குவரென நம்புகின்றனம். நாம் பிடித்தமுயலுக்கு மூன்றேகாலென்னிஞே! முற்கூறிய தோடங்கட் கெல்லாம் நம்மன்பர் ஆளாவதைப்பற்றி நாமே விசனிக்கின்றனம். நூற்புணரும் வருணத்திற் பிறந்தும் நூலாயும் நுண்ணறிவிருந்தும் சங்கரத் வேஷியாய் ஆபத்துக்காளாயின் நாந்தாமென் செய்வது? அந்தோபரிதாபம்! அந்தோபரிதாபம்!! அந்தோ பரிதாபம் !!!.

நம்மன்பர், சத்தியம்பண்ணிக் கூறப்பட்ட இரண்டாவது நிலை முடிந்த நிலையன் றென்ருர். அதனையிது காறும் அனேக உத்திகளிற் சாதித்தனம். அதனனே, ''சூதசங்கிதை கூறிமுடித்த பிரம சாக்ஷாற்காரம் ஆன்

மப் பிரமமே யாதலி" னென்னுமிவர் கூற்றுக் கூறு கூறுபினவாறு காண்க. பிஷ்ட பேஷண நியாயம்போற் பேசியதையே பேசல் பெரியார்க்கழகன்றுமென வமைவாம்.

இன்னமொரு விந்தைவருமாறு:— " புராணங்களுள்ளே லளிதமொழிகளாற் றொடுக்கப்பட்ட சூதசங்கிதையை எண்ணிப் பதினெட்டுத்தரம் படித்த அக்கேளத்தா" ரென்றார். அந்தோ பாபம்! இவருக்கித்துணை வயதாகியும் இன்னதெழுதலாம் இன்ன தெழுதப்படாதென்று தோற்றவில்லை. தவிரவும் தம்முடைய தன்மையின்னது தாமிகழப் புகுந்தோர் தன்மையின்னதென்றுவது தோற்றுகின்றதா? இல்லை இல்லை. "எல்ல செட்டிலக்க ஏகலக்க" என்பது போன்றேயன்றி வேறில்லை; ஏனென்னில் அனேக அதிவிதத கஹன கம்பீர பாடியங்களை யருளிச்செய்தவர்களும் அளவிறந்த துர்த் தார்க்கிகாதி வாதிகளைக் கண்டித்தவர்களும் அனேகங்கோடி சிஷ்ய சமுதாயங்கட்குத் தேசிகரானவர்களும் சகலபண்டித சிகாமணிகளாற் சதா விதந்தோதப் பெற்றவர்களும் ஸ்ரீவியாசாதிகட்கும் விஸ்மயத்தைப் பயப்பிப்பவர்களும் இன்னும் அளவிறந்த விசேடச் சிறப்புகள் வாய்ந்தவர்களும் சிவரகசியா

திகளும் ஸ்ரீமன் மகாதேவ அனுக்கிரக லீலாவிக்கிரக மெனப் புகழப் பெற்றவர்களுமாய ஸ்ரீமற்பூஜ்யபக வற்பாத ஆசார்ய சுவாமிகள் சாமானிய புராணிகர் களும் அதிசுலபமாய்ப் பிரசங்கஞ் செய்யக் கண்ணுற்ற சூதசங்கிதையைப் பதினெண்முறை யெண்ணிப்படித் தனர் என்றெழுத எவ்வாறு மனந்துணிந்தது, கண்பார்த்தது, கரம்வரைந்ததோ அறிகின்றிலேம். இவ ர் வரையும்போது ஏகாக்கிரமில்லாமல் மனத்தை யாண் டேக விட்டுவிட்டனரோ! இத்துணை நீர் வாயாடுவ தெ ன்னைகொல்? உங்கள் சங்கரதிக்விஜய வசன ஆருவ தத்தியாயத்தில் நுதலியதைத்தானேயாமும் நுதலி னும். நம்பேரிலேன்குறை கூறுகின்றீர், நீர் குறை கூறு வது தாருகாவனப்பெண்கள் நந்தந்தைக்கு நக்னிகளா ய்ப்பயிக்க மிடுங்கால் நந்தந்தையை நக்னனென ஏசி யது போலன்றோவிருக்கின்றது. விந்தை! விந்தை! நீர் நிக ழ்த்திய தெனினோ! அச்சங்கரவிஜய வசனத்தைப் பிரமாணமென இவரைக் கோடச் செப்பினார்யாவர்? இவர்க்கென் கீர்வாண வலியின்றுகொல்? இமயகிரிமுத ல் குமரிவரையும் பாராயணஞ் செய்வதும் அத்வைத சாம்ராஜ்ய லக்ஷ்மி முதலிய வியாக்கியானங்களால் அ லங்கரிக்கப்பெற்றதும் ஆய ஸ்ரீவித்தியாரண்ணிய முனி

வர் திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீசங்கர திக்விஜய மிவர்க்குத் தெரியாததா? அதனையேன் ஈண்டுக்கையாடவில்லை? தங்காரியம் பலியாதென்று! நன்று நன்று தமக்கு வேண்டுமான விவர் குஜிலிக்கடைப்புத்தகத்தையும்பிரமாணமாகக் கையாடுவர்போலும்? குற்றமாய இந்திரனும் குணமாய அந்தகனுமாத லாவிவேகிகள் இயல்பு? நூல் வழிசெல்பவர் நேராயன்றோ செல்லல்வேண்டும்? அது பற்றியன்றோ இலக்கண நூலாரும்“மனக்கோட்டந்தீர்க்குநூன்மாண்பு” என்று கூறினர். இஃதெல்லாமிவரறியாதவரா; இல்லை இல்லை! எப்படியாவது சங்கரத்வேஷியெனப் பெயர் வந்தாற்போது மென்னும் அவாவேயன்றி வேறேதுவைக் காணோம். முன்னெமக்குப் பள்ளியிற் பயின்ற ஸ்மரணமொன்றெழுப்பியவ ரானரிவர். அஃதாவது கஜினிமகம்மதென்பவன் 12ம் தரம் சோமநாதத்தைக் கொள்ளை செய்தஞான்று மறையோர் வேண்டிய தனக்கு வியல்களை யீகின்றோம், விக்கிரகத்தை யொன்றுஞ் செய்யற்கவென ஓன்றலாவேண்டு கோளால்வேண்டியும் அதற்கம் மகம்மது ஓரேபிடிவாதமாய்த்தனக்குப்பைகளையான் விழைந்திலன் “விக்கிரக நிக்கிரகன்” என எனக்குப்பெயர்வந்தாற்சாலுமென்பதேயாம்.எழுதினவர்கள் எழுதி

வைத்தாலும் பார்ப்பவர்கட்கு மதிவேண்டாமா! பின் யாதின்பொருட்டுத்தான்கீர்வாணபரிக்ஞானம்முயன்று கொண்டது. ஆனந்த லஹரிமுதலன எவராவது பிரமாணமெனவும் அவைசுத்தப்பதிப்பெனவுங்கூறப்புகின், எத்துணைவிரைவில் பிரக்ஷிப்தவாக்கிய மென்று நவிலவாயெழும்புகின்றது. அது இந்நூற்குமாத்திரம் வேண்டாமா! கோடானுகோடி கூறிப்பயனென்? பிரமாணம் மூலத்திற் கிடைப்பினெடுத்து வரைந்தனுப்பவேண்டுவ திவர் கடனுப்வைத்துக் கோடற்பாலதாம்.

இனி "அங்ஙனம் மாண்டூக்கியோப நிடதத்துட் புகுத்தப் பட்டகவுடபாதகாரிகையும் பொருட்படுத்தப்படுவ தன்று" மென்றார். உண்மைதான், பொருட்படுத்தப்படுவ தியாங்ஙனம்? பொருள் விண்டன்றோ? அஃதென் னுசானருளின்றிக் கைக்கூடுமா? கூடாது. கூடாது. அக்காரிகையும், ஸ்ரீ சுகபகவான் சீடராய ஸ்ரீ கவுடபாதசிரஞ்சீவி முனிவர் நிர்விகற்ப சமாதியை யெய்தி இமகிரியி னிருக்குநான்று ஸ்ரீ நாராயணமூர்த்தி யாங் கெழுந்தருள, அவ்வேதுவால் அச்சமாதியினின்று மெழுந்து அலர்காரங்கொண்டருச்சித்து நிற்ப, ஸ்ரீ பகவான் திருமகிழ்வுற்றுயாது வேண்டுமென வினவியருள, தேவரீர் திருவருளால்

நித்திய திருப்தனுயவெனக்கு யாதும் வேண்டற்பால தின்றெனப் பணிவுடன் றெரிவிக்க, அங்ஙனமறையற்க; யாமிங் கெழுந்தருளியதற்காக யாதேனும் வேண்டவே ண்டுமென ஆஞ்ஞாபித்தருள, உபநிடதங்களிற் சொற்ப மாய்ப் பன்னிரண்டு மந்திரங்களோடன்றோ மாண்டூக்கி யமிலங்குகின்றது. அதன்பொருளோ அதிகுகியமாயிரு க்கின்றதே, அதுசிறிது விரிந்து பொருடரின் யாவருக் கும் பயனுமெனக் கருதிய ஞான்றே சர்வஞ்ஞசூடாம ணியாய ஸ்ரீதிருமார்பன் அன்னணமே யாவான் நின் னுவினின்றுயாமேஉரைப்போமென அனுக்கிரகித்தருளி அந்தர்த்தானமாயினர். அதனுலே அக்காரிகைக்கு இக் காலும் சுருதிமுடிபோன் மாகான்மியமும் சாந்தியோ தியே யோதலும் நடைபெற்றுவருகின்றன. அத்திற மகிமையதேனும்அக்காரிகை ஸ்ரீபகவானுலருளினமை யின் ஸ்ரீபகவானிடத்தில் மேன்மதி யிவர்க்கின்மையின் பொருட்படுத் தப்படுவதன்று மென்றுர். வாளாவுரை வழங்குவராவிவர் முன்பின் மிகவும் பரியாலோசனை செய்து தானெழுதக்கலங்தொடுவர், இது யாவர்தா மறி யார்?

இனிக்கைவல்லியோபநிடதம் தமக்கு மிக அனு கூலமென்றன்றோ இவர் ஏற்றுக் கொள்ளுகின்றுர்.

அதைமுற்றினும்நன்காராயுங்கால் இவர்க்கொருசிறிதும் லபியாதெனத் தெற்றெனத் தெரிவாராக. அஃதாவது வருமாறு:—கைவல்லியோபநிடத 6 வது 7 வது மந் திரங்களில் "நித்தமா யொருவ ரானினைப் பரிதாய் நிம லமாயெங்கணும் நிறைந்து, சுத்தமாய்ச் சாந்தமாயனைத் துலகுந் தோற்றுதற் கியோனியாய்ச் சுபாவ, சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச் சிற்சதா னந்தமாய்ச் சிவ மாய்," "உரிய நால்வேதத் தோமெனும் பொருளா யுள் ளதா யுள்ள வெப்பொருட்குங், கரியதாய் நின்ற வொ ன்றினைக் காள கண்டமுங் கண்ணொரு மூன்றும், பிரி விலா மங்கை பாகமு மாகப் பேணுநற் பாவனைபெறுவா, னரியதா யருளி னல்வரும் விச்சை யதனினு லதனையே யடையும்." என வியம்பப்பெற்றுளது. இதனை விவர்க் குக் கையுற்ற தென்கொல்? உமாசகாயாதி யெனின்! அதனையாமென்சாதனமாய்க் கோடவில்லையா? சாத்தி யமாயேகோடல்வேண்டுமெனின்? உமாசகாயதிரிநேத்ர நீலகண்டாதி சகிதத்தோ டைக்கியமென்ப திவர் சித் தாந்த மன்றாமெனமறுக்க. ஜீவவிபு, சிவவிபுவி லைக்கிய மாவதன்று விவர் சம்மத சாத்தியம். முன் னிர்க் குணம் நுதலிப் பின் சகுணங் கூறியுண்மையின், இரு மையுஞ் சாத்தியமெனின்? முரணுப விருதருமங்கூற

லே யியையாததாம். அன்றி யதிகாரியு மன்னண மடை தலாகாதென மறுக்க. ஈண்டோதியதோ இச்சாதனத் தா லிதனைப் பெறலாமென்பதே எனக் கண்டுகொள்க.

"ஒழிந்ததொரு பொருளில்லை யுள்ளதெலா மவ னேமுன், கழிந்தபொருண் மேலும்வரக் கடவபொரு டானுமவன், மொழிந்ததனி பலவிச்சை யவிச்சையெனு முற்றுபவ, னிழிந்தபிறப் பறவேறோர் வழியில்லை யிவ னெழிய" என்று ஷை 9 வது மந்திரத்தே கூறியிருத் தலின், உமாசகாயம் சாதனமே யெனவும் அங்கிர்க் குணஞ் சாத்தியமெனவுந் துணியப் பெறும். இனிப் பத் தாவது மந்திரத்தே "இன்ன தெனுமற் றன்னிடைக் காணத் தன்னையெப் பொருளினுங் காணு, மந்நிலை யடை ந்தா லவன்பிர மத்தை யடையும்வே றென்றினு லடை யான்" என நவின்றிருத்தலின், தன்னிடை தன்னை யென்னு மிரு கிளவிகளும் ஆன்ம சப்தப் பொருளதாத லினன் அதன்பாலுலகைச் சுதந்தரமின்றிக் கண்டு அத னையு முலகின் முற்றிலுங்காணின், அஃதாவது காரண காரிய வேறுபாடின்றிக் காரண அத்திபாதிப் பிரியமா யே காணின், அதேயாய பிரமத்தை யடையுமெனப்பட் டது; படவே, ஆன்மசப்தமும் பிரமசப்த பரியாயமென "நன்மாத்திரமா யான்மாவென் றுரைக்கு நாமத் தினை

புடையா" னென்னுஞ் சுருதிப்படி கொண்டு ஜீவப்பிர ஹ்ம ஐக்கிய மெளிதிற்கிட்டி இவருக்கு யாதுங் கைவ ராது எட்டாக்கனி புளிப்பென்னுமிகலோக வுரைபோற் போமாறு நேரிட்டமையையறிஞர் ஆய்ந்துணர்ந்து கொள்க. ஆன்மசப்தம் ஜீவனேயென்னுமட்ட‘‘ஆன்மாவினி ன்றுமாகாசமுண்டாயிற்று" என்னும்மறைக்குமுரணுத லின் அடாதெனப் பிரசங்கத்தாற் கண்டுகொள்க. இது பற்றி வரைவது விரிவா யுளதெனினும் பிரசங்க மஃத ன்மையா லிம்மட்டே காட்டிவிடுத்தாமென்க. இவ்வுப நிடதத்தின்னுஞ் சிறிது ஆராய்வாம். ‘‘ஈனமாகி விடு ம்பி ராணன் மனங்க ளிந்திய மியாவையும், வானமூ தை நெருப்பு நீர்புவி மற்றுமந்த மகத்திலே, யாது தாகிலு நுண்மை யாமதி னுண்மையா மது வாகு மெய்ஞ், ஞான நாடிய தத்துவங்க ளெனும்ப தங்க ணவின்றதே, நீயெனும் பொரு ளேயதென்று நிக ழ்த்திடும் பொருளாவதுங், தூய சிற்பர மேபதங்க ளிரண்டினுந் துணி வாதலான்". எ௱ ஷ 15 வது 16 வது மந்திரங்களிற் கூறப்பெறலானே அவ்வாக் கிய மிவர்க் கென் பயனைப் பயக்கும்? "நீயே யவன் அவனே நீ" என்பதை யொப்புவாரா! சிவஞான சுவாமிகளான் மறுக்கப் பெற்றுத் திருமந்திரத்தே

சோயங் தேவதத்த திட்டாந்தத் தொடு வேண்டப் பட்ட விட்டுவிடாத இலக்கணை யொவ்வுமா? சிவ ஞான சுவாமிகள் தாசராய விவரெம்ம தென்னுமிவ் வுபநிடத மிவர்க்கொவ்வாத அனுபூதியைப் பகரலறி ஞரே காண்மின்! நடுநிலையோடு காணுமுங்கட் கெளிதி னறிதலேலு மன்றோ! "புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்பானேநா,னிகழுமித் தனைக்குஞ் சான் றாய் நின்றதற் சொருபனேநா,னிகழுவ தென்பா லென் பா னிற்பது மிறப்பதென்பாற்,சகலமு மாதலாலே தற் பரம்பொருளாகின்றேன். அணுவினுக் கணுவு நானே யப்படி மகத்துநானே, துணியிலெப் பொருளு நானே சோதியுட் சோதி நானே, பணிவுறத் தகுவே னானே பழையனும் புருடனானே, யிணைதனக் கில்லா வீசனா கிய வின்ப நானே. கண்ணுஞ் செவியு மின்றியுமே காணக் கேட்கக் கடவேனான், பண்ணுந் தொழிலெல் லாம்வல்லேன் பாணி பாத மில்லெனினு, மெண்ணுங் கடந்த விடம்ங்கே யிருந்துஞ் செல்வ னொருவர்க், கொண்ணும் படியன் றெனையுணர வெல்லாமுணருகின் றேனான். ஓதும் வேதம் பலவாறு மோதியுணரப் படு வேனான், வேதவேதாந் தப்பொருள்க ளெல்லாம் விள ங்க வறிவேனான்,தீது நன்றும் வினைமரணஞ் செனனங்

தேகேந் தியம்புத்தி, பூதமைந்து மின்றியக மிதமாய் நானே புசிக்கின்றேன். என, நிகழ்வதோ ரனுபவம் வந்து விளையுமே லழிவுளதன்றி யமலமா, யினிதுள நெஞ்சி லுறைவதா யிலதுள தன்றி யெதுவுமா, யனிய மிறந்தபிரமமா யறிவுரு வொன்றை யடையுமே. என, 18 வது 19 வது 20 வது 21 வது 22 வது 23 வது 24 வது மந்திரங்களிற் கூறியபடியாய அனுபவத்தை யிவ ரொப்புவரா! ஒப்பாரெனி னேன் கைவல்ய மெங்க ளுபநிடத மெனத் திங்குத் திங்கெனக் கூத்தாடா நின்றனர். மந்திரத்தை மொழி பெயர்க்காதிப் பிரம கீதைக்கவி யீந்த தென்கொண் டோவெனின், பிரம கீதையி லெம்பெருமான் றழைவித்தா ரென்னு மிவர் பேதைமையை நாக்கவேயா மென்க. இனி யிவ்வுப நிடதமன் றெவ்வுப நிடதத்து மிவர் நம்மோடு வாதாட லாம். சங்கரர் புரட்டினாரென்னும் புன்மொழியைமாத் திரம் விட்டொழித்திடல் வேண்டும்! விடேமெனின் யாமுமன்னனங் கூறவே விவத்தை சிவஞூதாம். ஆக வே, பிரமாணத்தைவிட்டு யுக்தியில் வாதாடினும் சமா தானஞ்செய்வாம்; எவ்விதத்தினு மிதமே யியற்ற லெங் கடனாதலா லென்க. இவர் தம் மறுதலையோடு மாத்தி ரம் வாதாடியிருப்பில் இவருடைய இந்த இரகசியங்களை

யெல்லாம் யாமேன் இப்படி வெளிப்படுத்துவேம். சண்ப்பன் வீட்டுக்கோழி தானே விலங்கில் மாட்டிக்கொள்வதுபோலன்றோ இவர்மாட்டிக் கொண்டார். பிரஹ்ம வித்யா நேயரெவரு மின்றென்று நினைந்தனரோ! இனியேனுங் கவனத்தோடும் வாழ்வாராக. இஞ்ஞான்றிவர்க் கெழுதும் பூட்டு இனிமே லிக்கோழி விலங்கில் மாட்டிக் கொள்ளாம லிருப்பதற்கே யன்றி இவர் மேற் கோபமெமக்குக் கிஞ்சித்தும் வேறில்லை. "தனக்கினிய னும்வகையே சராசரங்க ளனைத் தினையும் நினைத்" தென்னும் நங்கருணாநிதி திருவாக்கியப்படி சற்புருடர் நடப்பரே யன்றி யொருவருக்குத் தீங்கிழைப்பக் கனவினுங் கருதார். ஆதலினிதனை யிவர்கண்டன மொழியெனக் கருதாமலுபதேச மொழியென வுட்கொண் டடங்கிவாழ்வாராக. இன்னு முபதேசிப்பாம். இவர் உபநிடதங்களை முப்பிரிவாக்கி யெப்பிரமாணமுமின்றி மாயாவாத உபநிடதமெனவும், வைணவோப நிடதமெனவும், வைதிகபாசுபதோப நிடதமெனவும் பெயரிட்டார். அது பயனில் கூற்றேயாகின்றது. "தத்து சமன்வயாத்" என்னும் வையாசிக நியாயப்படி சர்வ வேதாந்தங்கட்கும் சாக்ஷாத் தாகவும் பரம்பரை யாகவும் நிர்க்குணப் பிரஹ்மத்தின்கண்ணே

தாற்பரியமா மாதலின் இவர்கூறிய முப்பிரிவில் இப் பிரிவிலித்துணை உபநிடதங்களென்றும் இன்ன இன் னவையென்றும் வரைவாரேல் மறுப்பான் கலமுங்காமு மா யெதிர்பார்க்கின்றேம். அதுவுங் கருணையால் அனு க்கிரகிக்கும் பொருட்டே யாமன்றி வேறின்றுமென் றுணர்க. இன்னும் யாம் அவ்வுபநிடதங்களைக் கண் ணுற்றதில் ஒன்றன்கண்ணேனும் மாயாவாத உபநிடத மெனப் பிரசங்கங் காணப்பெற்றிலம். இங்ஙனமாக விவர்க்குக் கடாகாசாதி சப்தம் யாண்டாகினுங் கா ணப் பெற்றிடினே ஆண்டே மாயாவாத மயல் உண் டாய்விடுகின்றது. "மருண்டவன் கண்ணிற் கிருண்ட தெல்லாம் பேய்" என்பது போலவாம்.

இனி யிவர் ஸ்ரீபஞ்சதசி முதலிய விடத்தே மாயாகாரியமே விசாரிக்கத் தக்கதன்றி மாயாரஹிதப் பிரமத்தின்கண் யாதொன்றும் வேண்டுவதில்லை யென் பதனுல் இவர்கள் மாயாவாதிகளெனவும் இவர் நூல் மாயாவாதநூலெனவும் அபிப்பிராயப்படுகின்றனர். இது தப்பபிப்பிராயமாம். அங்ஙனமன்றே:—உலகிற்குப்பிர மத்தை அபின்ன நிமித்த உபாதான காரணமென்று நுதலும்யாம் மாயாவாதியரல்லர்; மற்றே, உலகிற்கு மாயோபா தானகராய விவரே மாயாவாதி யாவரென்க.

அற்றேல், மாயையும் மாயாகாரியமும் விசாரித்தலா லப் பேறெனின்; அற்றாயின் கள்முதலவற்றை விசாரித்து நாக்கநுதலியருளிய திருக்குறள் அப்பெயருறாத தெவ் வேதுவால்? அற்றேல் மாயையையும் அதன் காரியங் களையும் இன்றென் றியம்பலால் அன்னண மறைந்தீத மெனின், இஃதறியாமையேயாம்; என்னே? சிவத்தையும் சிவலீலாவிக்கிரகங்களையும் அநிருதமென்னும் காட்சிப் பிரமாண வாதியரைச் சிவவாதிய ரென்னுமையென் கொண்டோ? மாயையை மெய்யென மருளுமிவர் மாயா வாதியா? பொய்யென நூக்கும் யாமா? கயிற்றரவைக் கண்டு மெய்யெனமருளும் அவர் பொய்வாதியா? அத னைக் கயிறெனக்கூறும் யாமா? எந்த இடத்தே பிரஹ்ம வாதியரை மாயாவாதியரென நவின்றுளது, சுருதியின் கண்ணா? மிருதியின்கண்ணா? மற்றைப் பிராமாணிகநூல் களின் கண்ணா? உலகிற்குப்பிரஹ்ம நிமித்தோபாதா னகராயாரை மாயாவாதியரெனக் கூறியிருப்பது இன் ன பிராமாணிக நூலிலென வெடுத்துக்காட்டாது பிரம வாதியரை மாயாவாதியரெனப் புலம்பினால் அப்புலம் பலை யார் நீக்குவர்? தானுய்த்தா னேய வேண்டுமன்றி வேறுகதிகாணேம். இவ்விஷயத்தைப்பற்றிப் பிரஹ்ம வித்தியா நிரூபநேயர்கள் வச்சிரத் தம்ப மொப்ப

விசாரித்து நர்ட்டி யிருப்பதால், வரைந்ததேசாலும்; ஆக்ஷேபமிருந்து வரைவாராயின் பதில் விடுப்பதி வியா து மையுற வில்லையென்றுணர்க. ஆகவே, இவர் கூற்றாய மாயாவாதம் மாயாவாதோப நிடத மென்பனவாதிய பொய்யினும் பொய்யாயவாறு காண்க.

இவர் இவ்விதமெல்லாம் வரைவது வேதாந்த உண்மை வெள்ளிடை மலைபோல் விளங்குதற்கே போலும். இனி மனங்கூசாது நினைந்து கண் கூசாது கண்டு வாய்கூசாது சொல்லி மெய்நடுங்காது இருந்து கைகூசாது வரையும் ஓர்பாதகத்தை நுண்ணறி வோ ரே நோக்குங்கள்! நோக்குங்கள்! பாதகமேனு மிதன் கண்டனத்தாற் பாவனமாகலாம்; பயமுறுதீர், பய முறுதீர்; அஃதென்னைகொலோவெனின் வரைவாம்:— பர்த்தாமரித்த பிற்பாடு கோளர் (ஆதிசங்கார்) ஜெனி த்தமைபாலன்றே மாத்ரோபநீதஃ "தாயாரால் உபநய னஞ் செய்யப்பட்டவர்" என்று சிவ ரகசியத்தினும், தேமாதா ரண்டா - உமது தாய் கைம்மை என்று சங் கர விஜயத்து 8-ம் அத்தியாயத்துங் கூறப்பட்டிருக் கின்று" ரென்பதே. மாத்ரோபநீதஃ என்னு மிப்பதம் சிவரகசியத்தின்மாட் டெவ்விடத்துற்ற எச்சுலோகத் தின்கண் ணுள்ள பதமென்பதை யேன் காண்பித்தா

ரில்லை? அதிற் குற்றம் நிகழ்ந்திடுமென்றோ? அன்றியும், இவரை இவர்பிதா மூன்றுவதாண்டில் விட்டுப் பரம பத மடைவுற்றதாக வைத்துக் கொள்வோம்; அஞ் ஞான்றிவர்க் குபநயனவயதுவரின் ஞாதியரைக்கொண்டு இவருமைத்தாய் உபநயனஞ் செய்துவைப்பின் அக் காலிவர் மாத்ரோப நீதரா? பித்ரோப நீதரா? மாத்ரோப நீதரென்று தானே மலரவேண்டிவரும்; அதுகொண் டே யாமிவரை இவர்கூறிய முறைநிந்தைக் காளாக்கி னெப்புவரா ? ஒப்பார் ! ஒப்பார் !! என்னை ? இவர்மதி மானன்று ? ஆயினிவர்மதி இவர்மட்டு மாத்திரம் ஊகித்துப் பிறர் நியாயத்திற் செல்லாத தென்கொல்? மதமருட்சியாற்போலும். இதுநிற்க "கல்பாதிமேபகா தேவி சகஸ்ரத் விதயாத்பரம் கேரளேச சலக்ராமே" "கலியுகாதி யிரண்டாயிரம் வருடங்கள் சென்றபிறகு கேரள தேயத்தில் சசலமெனப் பெரிய ஆலவாயாய காலடியென்னும் பதியில்" எனவும் "ஸ்ரீமதாம் வ்யாச சூத்ராணாந் த்வைதவாக்யாத் மனும்சிவே, அத்வைத மேவ சூத்ரார்த்தம் கரிஷ்யதி நசம்சயః" "தனித்தனி வாக்கியங்களாக ஸ்ரீவியாசமுனிவரியற்றிய சூத்திரங் கட்குச் சூத்திரப்பொருளத்வைதமாயே யுண்மையைச் செய்வனென்பதி லையமின்று மெனவும், " சிவேமதம்

சசம்பூதஃ சங்கரஃ சாங்கரோத்தமஃ சதுர்பிஸ்ஸக சிஷ்யைஸ் சகலாவவத ரிஷ்யதி'' "சிவையே என்னம்ச வடிவமாய்ச் சம்பவித்த சங்கரனெனப் பெயரிய சங்காசம்பந்த உத்தமன் நான்கு சிடரொடு கலியிலவதரிப்ப னெனவும்" தஸ்மை சோபநிஷத் வித்யாமயா தத்தா மஹேஸ்வரிபூ மௌபாஷண்ட ஷண்டானுங் கண்டனம் சகரிஷ்யதி'' "அவன்பொருட்டுபநிஷத்வித்தையென்னுலியப்பட்டது; மகேசுவரியே பூவின்கண் பாஷண்ட ஷண்டருடையகண்டனத்தை யவன்செய்வ" னெனவும் மகா விதிகாசமாய சிவரகசியத்தின்கண் நுதலியிருப்பன விவருக்குப் பிரமாணமா அலதின்று? இன்றென் றியம்பற் கியலாதாகவே பரமப்பிரமாணமெனவே கோடல் வேண்டும். கோடவே, இவர்மானமென வெடுத்துக் காட்டியதிற்கு முரணுப பொருட் கூறி ஸ்ரீஉமாநாயகனையே நிந்தித்து அதற்குறும் பயனையன்றே வடைவான் றுள்ளுகின்றார். அம்மவம்ம விதுதானு விவர்கற்ற நூற்குப் பயன்; நன்று நன்று; யாமோதிய தொழித் தொழிந்தவை கட்டுமொழிகளென ஆரியசமாஜிகள்கூறுவதொப்பக் கூறல் இவர்க் கியற்கையாதலின், அஃதை யீண்டும் கிளப்பில் என்னுமாலோ வெனின்? என்னும்; "கரிஷ்யத்ய வதாராணி சங்கரோ நீலலோஹிதசிரௌதஸ்மார்த்தப்பிர திஷ்டார்த்தம் பக்தனும் ஹிதகாம்யயா.

" உபதேக்ஷ்யதித்த் ஜ்ஞானம் சிஷ்யாணும் பிரஹ்ம சம்ஜ்ஞிதம், சர்வவேதாந்த சாரம் ஹிதர்மாந் வேத நிதர்ஸிதான்".

" ஏதம்ப்ரிதா நிஷேவந்தே யேனகேனே பசாரதஃ
விஜித்ய கலிஜாந்தோஷான் யாந்திதே பரமம்பதம்".

நீலலோஹிதனுப சங்கரன் அவதாரஞ் செய்வன் என்னவாவினுலோ வெனின்? பக்தர்கட்கு இதமியற்று மவாவால். அவாவால் யாதியற்றும் பொருட்டோவெனின்? சுருதிசம்பந்த ஸ்மிருதிசம்பந்த தர்மங்களைப் பிரதிஷ்டை செய்வானெனக் கொள்க. சர்வ வேதாந்த சாரமாய் பிரஹ்ம ஞானத்தையும் வேதநிதர்ஸித தன் மங்களையும் சீடர்களுக் குபதேசிப்ப னெனவும். யாவர் அவனை யன்புடன் தம்மாலாமளவு சேவிக்கின்றனரோ அவர் கலியாற்சனித்த தோடங்களை விடுத்துப் பரமபதத்தை யடையா நிற்பரெனவும்" கூர்மபுராணம் ௩0-வது அத்தியாயத்தில் அமைந்துளது. இதனைத் தமிழில் மொழி பெயர்த்தார் என் கொண்டு விடுத்தனரோ அறியேம்.

இங்ஙனே வாயு புராணத்தும்;

" தஸ்மாத் கலியுகம் ப்ராப்யலோகாணும் ஹிதகாரணத் அபயார்த்தஞ்ச தேவானும் உபயோர்லோக

யோரததா பவ்யஸ்ச்ச பூஜ்யஸ்ச்ச பவிஷ்யாமி சுரோத் தமா: தஸ்மாத்பயம் நகார்யஞ்ச கலிம்ப்ராப்ய மஹௌஜச: வாயுபுராணம் 32-வது அத்தியாயம்.

ஆதலின் உலக ஹிதகாரணத்தின் பொருட்டும் தேவதைகட் கபயார்த்தத்தின் பொருட்டும் உபயலோக அபயார்த்தத்தின் பொருட்டும் அக்கால் கலியுகத் தையடைந்து அக்கால் பவ்வியனும் பூஜ்பனும் அவ தரிப்பேன்; ஆதலின் கலியுக பயத்தைவிட் டொழிமின் சுரோத்தமரே என்பதாம்.

நுதலிய பிரமாணங்களோடு முரணி அதற்குறும் பயனை யெய்தலாமென்க. இவற்றுணுதலிய வவதாரம் வேறெனின், அவ்வவதார மின்னதென வியம்பற்பால தாம். அதுவும் நுதலியவண்ணம் கலியுகம் ஈராயிர வரு டங்கட்குமேல் சிவாம்சமாய் அவதரித்ததா யிருக்க வேண்டும். அதுவும் கேரள தேயத்தே சசலமெனப் பெயரிய காலடியெனும் பதியி லவதரித் திருத்தல் வே ண்டும். மேலும் ஸ்ரீமான்வியாசபகவான் றிருவாய்மலர்ந் தருளிய பிரஹ்ம சூத்திரங்கட் கத்வைதபாடியம் ஆற் றியவரா யிருக்கவேண்டும். அன்றியும், பிரதான நான்கு

சிடரோடு மருவியதாயும் தரிசிப்பிக்க வேண்டும்; பல வாய்ப் புகல்வானேன்? மேல் யாங்கூறிய பிரமாண விலக்கியமா யவசியந் தரிசிப்பிக்க வேண்டிய திவர்கடமையே யாமென் றுணர்க. இது நிற்க; ஸ்ரீ சங்கரதிக்கு விஜயம் 8 ம் அத்தியாயத்தில் "தேமாதாரண்டா" என மண்டன பண்டிதர் கூறியதும் பிரமாண மென்றன்றோ இவர் நவின்றார்; அதனைச்சற் றாராய்வாம். இவர்க்கவ் வெட்டாவ தத்தியாய வாக்கியமாத்திரம் பிரமாணமாய் இரண்டாவது நான்காவது அத்தியாயங்களிலுள்ள வாக்கியங்கள் பிரமாணமாகாமற் போயின காரணமென்னோ! அவ்வாக்கியங்கள் வருமாறு:—

ஸ்ரீவித்யாதிராஜர் பெருந்தவம் புரிந்து ஸ்ரீகிரிராஜகுமாரி நாயகனருளால் மகப்பேறுற்றதும் சிவனருளால் வந்த சிவகுருவென்னு மம்மகவு குருகுலவாசஞ் செய்தபின் தக்கணை தந்து இன்னேக்கி மீண்டதும், ஸ்ரீ மக பண்டிதர் வந்து அருந்ததியனைய வாரியாம்பிகை யென்னுந் தன் புதல்வியைச் சிவகுருவிற்கு மணப்பான் வேண்டியதும், மணந்தபின் வெகுகாலம் நிட்காம தவத்திற் காலம் நீத்துப் பின் மகப்பேறு வேண்டி யிருவரும் பெருந்தவ மாற்றப், பரமன்வந்து சில நாளிற்கும் ஞானமுறு மொருமகவா மிகுநாள் வாழு

ஞானமிலாப்பன்மகவா விழைவென வினவ, மிருகண்டு சுதனெனுப்பத் தந்தருளவேண்டுமெனவேண்ட, அன்ன ணமாகுகவெனத் திருக்காட்சியீந்தருளி மறைந்ததும், மறையோர்க்குணவளித்துச் சைவதேஜசோடுற்ற பிர சாத மிருவரு மருந்திச் சிரியராசிகள் பெற்றுத் திரு வருளால் அருமகவைப்பெற்றதும், பிள்ளை பிறந்த தெனக்கேட்கப் பெரியோரான சிவகுருவும் துள்ளி நீரிற் குதித்தறலின் றுளிகள் பிதுர்க்கட் கீந்ததுவும், உள்ள சாதகரும முதலுவந்தே சிறக்க முடித்ததுவும், மற்றும் பிறவும் இரண்டாவ தத்தியாயத் துள்ளனவா மென்றுணர்க.

இனி நான்காவதன் கண்ணே சவளகர்ம முடித் ததும் நூற்கரும முடிப்பா னெண்ணிக் கொண்டிருந்த சங்கரர் மூன்றுமாண்டில் சிவகுரு விதேக கைவல்யமுற் றதும் பின் றாய் ஞாதியரால் நூற்கரும முடித்ததும் மற்றும் பிறவுங் காண்க.

இப்பிரமாண வாக்கியங்களை இவராய்ந்து பின் அவ்வெட்டா மத்தியாயத்தி லெடுத்துக் காட்டியவாக் கியத்தைப் படித்திருப்பரே லிவ்வித விபரீதத்திற் குள் ளாகார். அங்ஙன மாற்றுது துவேஷத்தால் தேடிக்

கண்டுபிடித்ததே யிவ்வாக்கியமாம். ஆகவே யிவர்க்கிது பயன்படாவாறு விவேகிகடுணிக. இவ்வாக்கிய மிவர் கோலிக் கொணர்ந்து குற்றங் கூறியதை நோக்க விவர்க்குச் சாப்தபோத சாமக்கிரியை கூட இன்னதெனத் தெரியாதவாறு தெற்றெனப் புலப்பட்டதென்க. அஃதி யாங்ஙன மெனின், காட்டுதும்:—சாப்தபோ தமாயது, யோக்யதை அண்மை தாற்பரியம் அவாய்நிலை என்னும் நான்காற் சாதிக்கற் பாலதன்று! அவற்றுட் டாற்பரிய மொன்றன்று? அஃதில்லாவழிச் சாப்தபோத மாமா!எங்ஙனம்:—சைந்தவத்தைக் கொணு என்புழிப் பிரகாணத்தை நோக்கியன்று பொருள் கோடல்வேண்டும்; என்னை! வைதிக தாற்பரியம் சுருதி, லிங்க, வாக்கியப், பிரகாண, ஸ்தான, சமாக்யை என்பவற்றானும் இலௌகிக தாற்பரியமோ பிரகரணத்தானுங் கோடலுரித்தெனப் பெரியாருரைத்தலானென்க.எனவே,பிரகரணங் கொண்டே "சைந்தவத்தைக் கொணு" என்பதன் பொருள் கோடல் வேண்டும். அதுதா னியாங்ஙனமெனின், அங்ஙனமன்றோ:—சைந்தவப் பதப்பொருள் இலவணமும் பரியுமாம்; ஆகவே, உண்ணுங்கா லப்பிரயோக மாற்றில் இலவணங் கொணர்ந்தித லன்றோ விவேகியர் கடன். அஃதலாது பரியைக் கொணர்ந்து

நிறுவி னவனறி வென்னும்? அன்றியும் அங்ஙனமே யாத்திரைப் பிரகரணத்தி லப்பிரயோகங் குயிற் றினோ அசுவத்தையன்றோ கொணர்ந்து நிறுவ வேண் டும்; அஃதலாது உப்பைக் கொணர்ந்து வைப்பினவன் மதியிருந்தவா றென்கொல்? இஃதொப்ப! நம்மன்பர் இத் மேதமாதா ரண்டா என்பதை யாண்டிருந் தெடுத்தாரெ னச் சற்று ஊகிப்பாம். "யாண்டிருந்து முண்டியென, களத்தளவு முண்டியென; நின்னெறி யென்னுல் வினவ லாயதென, அந்நெறி யென்னறை வுற்றதென; நின் னன்னை முண்டையெனப் பன்னிற்றென, அங்ஙனமா, அங்ஙனமேயாகுக ஹேமண்டன! நெறியை நீவினுயினுய், நின்பொருட்டே நெறி கூறியதன்றோ, நின்னன்னை யென்பதன் கண், இந்நின்னென்கிளவி வினவாத வென் னை நுதலாதன்றோ, அகோ கண்ணின்றற் பீதமா வென, இன்றின்று வெண்மைதா னெதனற் சிந்தி யென, நீயென் அன்னதின் வன்னமுணருதிகொலோ வென, யான் வன்னம் நீரசம்" என்பனவாதிய பற்பல விதமாம். இதனை மூலப்படி பாராத தோடத்தாற்றான் மேதமாதா ரண்டாவென வாக்கியபேதமாயது மெனக. இங்ஙனம் மண்டன பண்டிதரா விகழத் தொடங்குங் காற் றகுந்தவிடை ஸ்ரீசங்கர தேசிகரீந்ததாய இகழ்தற்

பிரகரண மன்றோவிது. இதன்கண் மானமெனப்படுவன் வெவையெவை? மானமெனிற் சிராத்தத்தின் பொருட் டாங் குற்ற வியாதராதியாற் றடுப்பானேன்? விஷ்ணு வென வணங்கி வழிபடச் செய்வானேன்? அங்ஙனம் பூசித்துப் பிக்ஷைக்கழைப்பானேன்? மேற்கூறியவற்றை யுய்த்துணிரின் மண்டனர் தம்மன்னை முண்டை யாகா தது யாங்ஙனம்? இனியேனு மிவற்றைக் கற்றுணர்ந்து கொள்வாராக. இங்ஙன மப்பிரமாணமாய விகழ்த்தற்பிர கரணத்தின் மாட்டுள்ள தேமாதாரண்டா வென்பது இவர்க்குப் பிரமாணமாயது தாற்பரிய வுணர்ச்சி யின் றென்றன்றோ தெற்றெனப் புலப்படுத்துகின்றது. உல கத்திற் றிட்டிக்கொள்வதைக் கூட விவர் கேட்டி லார் போலும்; கேட்டிருப்பின் வேண்டும் வேண்டுமிடங் களி லடுக்கடுக்காய் மானங் கொடுக்க வடுக்குமன்றோ! அந்தோபரிதாபம்! இவர்மதியேமதி! எத்துணைச் சாப்த போத மிவர்க்குண்டாயது பாருங்கள்? இவரையன்றோ கிரந்தங்கட்கு வியாக்கியான கர்த்தாக்க வேண்டும்? விந்தை! விந்தை!! இவருக்கிது மாத்திரம் பரமப் பிரமா ணமாகி இரண்டாவது நான்காவது அத்தியாய அர்த் தங்கள் காணமலுங் கேட்காமலும் போயது விந்தை யினும் விந்தை யன்றோ! இவர்மதிமான்றான்; ஆயினும்

நிந்தையாற்றவேண்டியவசாமுற்று வரைந்து விட்டார்; அக்காரணத்தாற்றான் முன்பின் ஞாய்வு மவர்க் கெழும்ப வில்லை; அவர்பேரிற் றேடமென்? உத்தேசித்த காரியந்தானே பார்ப்பார்; தாற்பரிய ஞாநுதியவெல்லாம் சாஸ்த்ரீயமன்று? அவை விரைவுற்றாலேலுமா? இவருற்ற வேகத்திற் கவைமிகு சேய்மையன்றோ! யதார்த்தபோதம் வரப் புண்ணியம் வேண்டாமா? புண்ணிய மென் எறிந்தா கிடக்கும்; இல்லை, இல்லை; வருந்தித்தான் வர வேண்டும். இனியாயினும் இவ்வேகத்தைத் தடுத்து யதார்த்த போதத்தின் பொருட்டுப்புண்ணியத்தைச்சம்பாதிப்பான் கருணையாற் கூறினும். இது நிற்க, இனிவைவது உண்மையா யிருந்தாற்றானு செய்வது. நம்பரவையுறழ் கருணைப் பரவை நாயகன் முக்கட்சுடரை இயற்கை மெய்ஞ்ஞானியை சர்வஞ்ஞநாதனைப் பித்தா வெனக்கூறினு ரன்றோ; கூறியதான் மாதேவன் பித்தனு? பித்தனே லிவர் தங்குடும்பப் பித்தை நீக்க வல்லனுதலியாங்ஙனம். அன்றியும் வைணவர் நம்பெருமானை அனேக நிந்தை செய்கின்றனரே; அவற்றை யெல்லாமிவர் நம்பெருமாற் குரியவை யென்றன்றோ நம்பி மோசம் போவர்; அன்றியு மிவரையே ஒருவன் வாய்கொளா நிந்தை ஏதேனுங் காரணம் பற்றிச் செய்யின்

அவற்றை யெல்லாந் தம்பா லொப்புவரா? ஒப்பா ரொப் பார்!! மதி மானல்லவா! பின்னரிது மாத்திரமே னெப் பின ரெனின்? சங்கரத்வேஷக் கொடுமையே யென்க. இனியேனுஞ் சங்கர த்வேஷத்தை விடுத்துத் தாங்கொ ண்ட கொள்கைப் பாலேனுநின் றுய்வாராக. நிந்தையாற் பாபமேயன்றி யிறையும் வேறெய்தாதென வுணர்வான் வற்புறுத்திக் கூறுகின்றேம். உலகில் இருவர் அடித்து மல்லுக்கட்டி யுத்தஞ் செய்யின் அடிபட்டுக் கீழான வன் வயாறிட்டுவது வழக்கம்; மேலிருப்பவனோ கை யான் மாட்டுவது வழக்கம். அஃதொக்காமேயன்றி வேறென்னு மிவ்வைவு? சாஸ்திரார்த்தம் கைக்குள்ளி ருப்ப வேறொன்றை வரை வானேன்? சரீர விடயத்தில் சிநேகமே யுள தாகுக; நூற்கண் விவாதமேல் வரைக; வேறு காரியம் விவேகியர் கூற்றன்றும். நூனிண்ணயம் வரைவது பலருக்கும் பயனு மன்றிப் பிறிதன்று மென்க.

இங்ஙன மேன் விவாத மாற்றல்? எம்மறுதலை மா ட்டிய தற்காக மாட்டினே னென்னின்? முதலிற்றம் மறுதலை யென்றும்; தாமோ மறுதலையின் மறுதலை வக் கீல் எனலாம்; ஆகவே மறுதலையை யன்றோ மாட்ட வேண்டும்; அஃதொழிந்து நியாய விரோதமாய்

ஸ்ரீபகவற் பாதரை நிந்தித்த தென் கொண்டோ? அவர் குருவாதலி னெனின்? இஃதோரறியாமையே யன்றோ; ஸ்ரீ சங்கர தேசிகர் கேவலமவர் குருவன்றன்றோ மற்றோ சிருங்ககிரி துவாரகை பதிரி நாராயணம் ஜகந்நாதம் என்னும் நான்கிடத்துற்ற சீட பரம்பரைக்கும் பஞ்சத்ராவிட பஞ்ச கௌடருக்கு மன்றோ ஆசிரியர். அத் தகையரை நிந்திப்பது மற்றவ ரொப்புவரா? இராஜ தந்திர ரீதியாய்த்தா னிது நியாயமா? இவர்க்கும் மற்றொருவர்க்கும் விவாதமேல் இவர் தந்தையை யெதிரியிகழின் இவர் தம்பி யொப்புவரா? என்றமயனுக்கும் நினக்கும் வாதேல் என்றமயனும் நீயுமெங்ஙனமேனும் வாதாடுங்கள்; என்றந்தையை யிகழின் எனக்குக் கோபமன்றோ வருமென அவசியமே அறைவரன்றோ; இஃதுலகில் யாவருக்குத்தான் றெரியாது; இவருந்தெரிந்து செய்தவரே யன்றித் தெரியாமற் செய்தாரல்லர். தெரிந்து செய்யுமேது வென்னெனின்? சங்கரமத த்வேஷமே யாம்; இன்றேற்சம்பந்த மின்றி முன் பின் முரணுற நிந்திப்பாரா? நிந்தியார்! நிந்தியார்!! காரியங்கொண்டு தான் நிந்தித்திருக்கின்றார்; ஆனலதுவும் ஆராய்ந்து வரையலாகாதா? சாஸ்திரீய வியவகாரத்திற் பொறுமை யன்றோ வேண்டற்

பாலது. இஃதிங்ஙனமாக, இன்னமொரு விந்தை வரை வதைப்பாருங்கள்:—மோக்ஷ மூலபண்டிதரும் (Max-muller) & தீபெட் பண்டிதரும் (Thebaut) பிரஹ்ம சூத்திரங்களைச் சங்கர பாடியத்தோடு ஒத்துப்பார்த்த பின் சூத்திரங்கட்குச் சங்கரர் எழுதிய பாடியம் பொருத்த மில்லை யென்றும் இராமாநுஜர் எழுதியது ஒரு பிரகாரம் பொருத்த முடைய தென்றும் கூறினமை யின் இராமாநுஜ பாடியத்திற்கு மூலமாய் நின்ற நீல கண்டாருளிய பாடியமே சத்தியார்த்த பாடிய மாம். இந்நாளையிலே தான் நீலகண்ட பாடியம் அச்சிடப் பட்டு ஜர்மன் பண்டிதர் கையில் எட்டியிருக்கின்றது; அதனைப் படித்துணர்ந்த அத்தேசத்துப் பண்டிதர்கள் சங்கர பாடியத்தை இதுவரை சத்தியமென வங்கீகரித்த இன்ன இன்ன பண்டிதர்கள் நீலகண்ட பாடியத்தைப் பார்த்தார்களில்லையே என வருத்த முறுகின்றுர்கள் என ஆங்கிலேயே சமாசாரப் பத்திரிகையினுல் அறியப்படுகின்ற தென்றுர். இவருக்குப் பத்திரிகை பரமப்பிரமாண மான வாறும் ஸ்ரீ நீலகண்ட சங்கர பாடியங்களின் வேற்றுமை புலப்படுத்த இங்குள்ளார்க் காற்ற லின்றென்று கருதி ஆங்கிலேயரைக் கொண்டவாறும் அறிஞரால் வியக்கற் பாலதே யாம்.

அங்ஙன மேனும், சங்கர பாடியம் சத்தியார்த்த பா டிய மென்பதும் மற்றவை யென்பதும் ஈண்டு யாவரு முணர்வர். இது நிற்க அமேரிக்கா, லண்டன், ஜர்மன், பிராஞ்சு முதற் பிறவிடங்களிலும் ஸ்ரீ விவேகானந்தர் அனிபெசண்ட் இன்னுமநேகர் சங்கா மதத்தை நிலை நிறுவி வெற்றியுற்றது இவர்நிந்தே யிருப்பர். அறியாரேனும் யாவரு •மறிந்ததேயா மிவ்விஷயம்; இதைப்பற்றி மிக வாதாடி யென்பயன். இனி யிராமா நுஜ பாடியத்திற்கு மூலம் நீலகண்ட பாடிய மென்றன் றோ கலமிட்டார்; நீலகண்ட பாடியமோ மகா தாற்பரி யர்த்துவித அவாந்தர தாற்பரிய துவித்ததாம். இராமா நுஜர் பாடியமோ விசிட்டாத்துவித மாம். ஆகவே இதற்கது மூலமாயது யாங்ஙனம்! அங்ஙனந்தான் வை ணவர் ஒப்புவரா? ஒரு மதத்தர் நூல் மற்றொரு மதத்தர் நூலுக்கு மூலமாமா? ஆமேல் மகம் மதியர் தம்மத மூலமாய்க் கொண்டுண்டாயதே இக்கிருஸ்து மதமெனக் கூறுங் கூற்றைக் கிருஸ்துவ ரொப்புவரா? ஒன்றொன்றிற்கு மூலமெனிற்சா திருசியம்வேண்டாமா? சிவஞான சித்திக்குச் சிவஞான போத வெண்பா மூல மென்னின் ஒக்கும்; அஃதன்றி ஞானவாசிட்ட மெ-

னின் யாவரெப்புவர்;சொல்பவரையுமன்றே நகைப்பர். தம் முன்னாசிரியர் அருளிய நூல், வேதாகமங்கள் முதல வுரித்தானவையே, தாஞ்செய்யு நூற்கு மூலமா மன்றிப் பிறவாகா; அவ்வாறிருக்க எவ்வொற்றுமை யா லிவ்வண்ண மிவர் கூறினார். அபின்ன நிமித்த உபாதானுதி யாலெனின்? வைணவ பாடியக்காரர் இப் பாடியங் கொண்டே அபின்ன நிமித்த உபாதானஞ் சா தித்தா ரென்பதென்னே! நீலகண்ட பாடியம் முன் னிருத்தலினெனின்? முன்னிருந்த சங்கர பாடியத்தை யேன் நவிலலர்காது? இம்மூல விவகார மிங்ஙனமாக நீலகண்ட பாடியமே சங்கர பாடியத்தின் சாதனமா கச் சங்கர பாடியத்தைச்சாடி நின்றது யாங்ஙனம்?

இச்சாதன சாத்திய வுடன்பாடு யாண்டு காணலா யதோ வெனின்? அதிசேய்மையினன்று, இவர் சிரமேற் கோடுந் தீக்ஷித யோகியரே நீலகண்ட பாடியவியாக்கி யானமாய சிவார்க்கமணி தீபிகையின் மாட்டும் நீலகண் டபாஷியார்த்தக் கருக்தைட் போதிப்பிக்கும் ஆனந்தல கரியின்கண் ணுமென்க. அவை பிரக்ஷிப்த வாக்கியங் களாற் றொடவடாதெனின்? இவரீயும் பிரமாணங்க ளிற்றான் எமக்கென்ன ஆதரணீயம், யாமுமிவர்காண் பிப்பதை யவ்வாறு கோடினென்னும்; என்னும் விவத்

தை சிவணுதா மெனின் ? அந்நெறியாவருங் கோடலன்றோ வேண்டும்; வேண்டவே கலந்தமொழியென்னும் பேதைமையை இவர் அறவே விட்டொழிக்க வேண்டுமென்பது துணிபாம். வாதிப் பிரதிவாதிகள் வழக்கிடுங்காற் பிரதிவாதியின்பேரிற் சட்டப்படி குற்றப்பத்திரிகை வாசிக்கி னிச்சட்டம் வாதியார் கற்பித்தது யானெப்பே னெனி னேனுமா? மேற் றண்டனையுமன்றோவரும். அங்ஙனமே இவர் சொல்வழி தம்பக்கத்துக்குந் தோல்வி தமக்குமாயிற் றன்றோ! இன்னுமிவரும் பிரமாணமாய்க் கொண்ட சங்கர விஜயத்தில் 15-ம் அத்தியாய ஈற்றில் நீலகண்ட பண்டிதரை மேற்குத்திசையிற் சந்தித்து வென்று தங்கொள்கைக் குட்படுத்தப்பட்ட தென்றிருக்கிறது. அவ்வண மாராய்வுழியும் சிடன்பாடியம் பத்திபாடியஞ் சாதனமாயும், தேசிகர் பாடியம் ஞானபாடியம் சாத்தியமாயு மொல்லுமெனற்கியாதுகொ லையம்! தமிழ்வசன சங்கரவிஜய மங்ஙனம் நுதலவில்லையே யெனின்? மூலத்திற்கு முரணுயதென்றுணர்க. ஆயின்நீரதைத் தீண்டுவதேயின்றோவெனின்! மூலத்திற்கு முரணில்பாகம் சிரமேலேற்றித் தேற்றிப் போற்றிக் கோடலெம்மியல் பென்க. மூலத்திற்கு முரணுயின் யாவர்தாம் மொழிபெயர்த்ததைச் சரியென்பர்?

இவ்விஷயம் எமக்குமாத்திர மன்றும் யாவருக்கு மென்றுணர்க. இன்னுமிவர் நீலகண்டபாடியமே சத்தியார்த்த பாடியமென்கின்றனன்றே, அங்ஙனமாயின் ஆறுசாத்திரச் சார்பாருளவராய சைமினிசார்பார், கபில சார்பார், கணுதசார்பார், கௌதமசார்பார், பதஞ்சலிசார்பார் என்பார் ஒவ்வொருவரும் பிறரைக்கண்டிக்குங்கா லுற்ற வியாசச் சார்பாரைக் கண்டிக்குஞான்று ஜீவப்பிரஹ்ம ஐக்கியவாதியராய சங்கரசார்பாரைக் கண்டிக்கின்றனரா? நீலகண்ட சார்பாரைக் கண்டிக்கின்றனரா? இப்பாடியமே சத்தியார்த்த பாடியமாயின் அத்வைதிகளைக் கண்டிப்பானேன் இராமானுஜ மாத்வபாடியங்களையேனும் வியாச சூத்திரத்திற்குரியதாய்க்கொண்டேன் கண்டிக்கலாகாது. இவற்றையெல்லாமே னுய்த்துணரலாகாது. அற்றேல் நீலகண்டபாடியம் சத்தியார்த்தபாடிய மாயினு மிவர்க்குக் கைவந்த பயனென்கொல்? இன்றேவெனின்? இன்றென்பதைக் காட்டுதும்:—ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியரோ மகா தாற்பரிய நிர்க்குண அவாந்தர தாற்பரிய சகுணவாதியும் வேதம் முத்திநூலென்பவரும், வேதத்துட்சிவனுக்கே பரத்வம் நுதலுகின்றதென நுதலுவரும், அத்வைதிகளைப்போ லுலகிற்கபின்ன நிமித்த உபாதான

காரணமாகச் சிவத்தைச் செப்புவரும், சிவத்தின்காரியம் இவையாதலாற் சிவமயமென்பவரும், விவர்த்தவுபாதன உடன்பாடரும், கடத்திற்கு மண்கடுப்ப உலகிற்குச் சிவத்தைமுதற்காரணமாகச் சொற்றிடலான் சிவவாதியும், சீவன்முன்னும் பின்னும் அணுவென்பவரும் சீவனைச் சத்தென்பவரும், என்பன வாதிய பல நுதலுவருமாவர். இவரோ, தாற்பரியபேத மின்றிச் சகுண நிர்க்குணவாதியும் வேதத்தைப் பசுநூன்முதலன வென்பவரும், மாயாவாதமுதலிய பலவும் விஷ்ணுவாதிகட்கும் பரத்வமும் நுதலும் வேதமென்பவரும் சிவத்தை யுலகிற்குக்குலாலனெப்ப நிமித்தமாத்திரமாய்ப் பன்னுவரும், மாயையின்காரிய மிவையாதலான் மாயாமயமென்பவரும், விவர்த்த உபாதான உடன்பாடின்றிச் சாங்கிய ரொப்பக்கேவலஞ் சற்காரியவாதியும், மாயையுலகிற்கு முதற்காரணமாகச் செப்பி மாயாவாதியும், சீவன் முன்பின் விபுவாய் இடையின் மாத்திரம் அணுவென்பவரும், சீவனைச் சதசத்தென்பவரும், மற்றும்பல புகல்பவரு மாவர். .இன்னணமாக அந்நீலகண்டபாடிய மிவர்பாடியமாயது யாங்ஙனம் ? இவர்பாடியம் அஃதாயின் இவர்க்கும் பிராமாணிகமாய்ச் சங்கரவிஜயக்கூற்றின்படி ஸ்ரீ நீலகண்ட சிவாசாரியரைச் சங்கர

தேசிகன் மாணுக்கனுமா ருற்றித் தாமும் பாம்பராமா ணுக்கனுய்ச் சங்கர த்வேஷியாய்ப் பாதகத்திற் காளா காமல் வாழலாமே யாவரோ தடுக்கலுற்றூர். நீலகண்ட பாடியத்திற்கு நேரே முத்திசாதனத் தன்மை யின் மையின், அங்கமாய்ச் சங்காபாடிய அங்கியோடுற்றே பலம் பயக்குமென்க. பிரயாஜாதியங்கங்கள் தன்னங்கிக் கொப்ப வென்றுணர்க. சாலும்பாடிய மூலசாதனை சாத்திய அங்காங்கி விசாரம்.

இன்னமொரு வேதவிரோத விந்தைவரைவதைக் காட்டி மறுப்பாம். அஃதாவது வருமாறு:—"சங்கி யாசியார் மாயாவாத சர்வசார முதலிய உபநிடதங் களைப் படித்துப் பார்த்தபின் கற்பனை அத்தியாசம், ஆரோபம், மித்தை, காடாசாம், மடாகாசம், அநிர்வச னீயம், வந்தியாபுத்திரன், ககனாரவிந்தம், ஸ்தாணுபுரு டன் முதலியகாணப்படாத இந்த உபநிடதங்களுள்ளே கடாகாச மடாகாசக் குறளிவித்தையைமாயாவாதோப நிடதங்களி னின்றும் பெயர்த்துக் கொணர்ந்து புகட்டி இவர் மூலபுருடர் பசுபதிகளைக் கொன்றுற்போலவே யென்றூரன்றே. இதன்கண்ணுதியில் மாயாவாத சர்வ சாரமுதலிய உபநிடதங்களைப் படித்துப்பார்த்த பின் னென்றூர். சர்வசாராதிகட்கு மாயாவாத வுபநிடத

மெனப்பெய ரீந்தது இவரா? இவர்முன்னோரா? வேறு இருடியரா? வேதமா? இவரெனின்? எந்நூலையுந் தமக் கேற்பத் திருத்துவதேயன்றி யயலார்பா லக்குற்றத்தை யுஞ் சுமத்துங் குண மிவர்க்கியல்பா யிருத்தலி னிவர் மொழி யாவர் மொழியென வெள்ளற் பாலதோ அத னை யறிஞரே யுணர்ந்து கொள்க. இவர்முன்னோ ரெ னின் ? இவர்போலு மிட்டப்பிரகாரங் கூறியவரே யலாது பிரமாணங் கொண்டன் றெனமறுக்க. இருடிக ளெனின் ? யாவர்? எங்கே? எச்சந்தர்ப்பத்தில் ? ஏன்? என்பவற்றைப் பற்றி வரைவாராக. அதனைச் சற்று காட்டுவ திவர் சிரமேனின்ற கடனும். அன்றியும் மறையறைந் திருப்பினிவர் நிலைநிறுத்த இத்துணை முட்டுப் பட்டுக் கட்டப்பட் டுழலவேண்டுவ தின்றன் றே! இவர் மனமெங்ஙனந் துணிந்ததோ இங்ஙனில் லாத பொய்யைப் புகட்டச் சிவசிவா! சிவசிவா!! உலகி லொருவன் பொய்சொன்னனேல் ஏன் பொய் சொன்னயெனின்? நானுபொய் சொன்னேன்யானுரை ப்பேனு அவன்சொன்னன் இவன் சொன்னனெனப் புகலல்போற் ருந்திரிபு செய்து புரட்டும் பழக்கத்தை மேற்கொண்டு செய்துவிட்டுப் பின்யாவரேனுங் கடா வில் அவர்புரட்டினு ரிவர்புரட்டினு ரென்றுபுகலலிவர்க்

குத் தருமமா! மற்றுஞ்சிலர் தீயகாரியஞ்செய்துவிடின்; தங்கள்பேரி லதுவந்து கலிவுறுத்து தற்குமுன் ருமே அவாத்தகைய ரிவாத்தகைய ரெனப் புகன்று தாம் யோக்கியராகப்பார்ப்பதுண்டு; அவர்க்குநிகரன்றி யிவர் வேறுயார். இம்முறையுளுற்றின் அறிவிலார் காணு ரென்னினும் அறிஞர் காண்பதிற் றடையென்? இஃதிங் ஙனம் நிற்பக் "கற்பனை, அத்தியாசம், ஆரோபம், மித் தை, அநிர்வசனீயம், வந்தியா புத்திரன், ககனார விந் தம், ஸ்தாணு புருடன்," என்பனவும் "கடா காசம் மடா காசம்" என்பனவு மிவருக் கொவ்வவே யில்லை; என்னை இக்கற்பனை யாதிய, உலகைப் பொய்யென வறி வுறுத்த வமைந்தசொற்களாதலின். உலகைமெய்யெனி லிவருக்கு மிகமகிழ்வாயிருக்கும்; என்செய்வது; பிரமா ணங்கள் சம்மதிக்க வில்லையே! காண்டலாலோ கண் கூடாயே தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும்போவா ரென்றன்றோ விருக்கிறது. கொஞ்சக் காலத்திற்கு முன்னிருந்தவையெல்லா மிப்பொழுது கதையா யிருப்ப திவருக் கென் றெரியாததா? கரு தலாலோ:—பிரபஞ்சம், மித்தை, திருசிய மாதலின், சடமாதலின், பரிச்சின்ன மாதலின், கனுக்கரி கடுப்ப. கனு மெய்யாதலின் திருஷ்டாந்தம் விஷமமா மாலோ

வெனின்? கனவை மெய்யென்பா னிவர்காலமெல்லாங் கலக்கரத் தோடிருப்பினு மியையாதென்றே யுணர்ந்து கொள்க. கொள்ளவே கனவுறழ்வுலகு பொய்யெனத் துணியப் பெறுகின்றது.

மைத்திரேயோபநிஷத்:—சகத்தை யிந்திர சால மாய்ப் பார்க்கிற வனும்.

இவர்க்கு விஷம் போன்றதும் பர்ம சிவனுக் கமிருதம் போன்றது மாய சர்வசாரோபநிஷத்.

மித்தையாது? இல்லாவுலகை யிரும்பிரமத் தாரோபிப்பதே. மாயை யென்பதியாது? அனன்மமூலம் யாதோ அஃதே மாயை; அம்மாயை அநாதி முடிவு பேறுடையது; இருப்பது மில்லாதது மிரண்டும் விரவி யது மன்றும், வாக்குக் கெட்டாதது, அதிஷ்டானத் தின் கண்ணே யில்லாதது. எஃதுண்மையி லிலதோ அஃதே மாயையாம். அதன் வடிவ மஞ்ஞானமாம். அஃதே மூலப் பிரகிருதி, சகதாகாரமாய்ப் பரிணமித் திருக்கின்றது.

நிராலம்போபநிஷத்.

இரண்டாவதற் றெங்குந் தொடர்ந்து சகல வடி வாயு முள்ள பிரஹ்மத்தின்கட் டேவ, மிருக, நர, தா வர, ஸ்திரீ, புருட, வருணச்சிரம, பந்த, மோக்ஷ உபாதி

யாய பற்பலவாக பேதத்தாற் கயிற்றிற் பாம்பென்னும் மயல்போற் கற்பித ஞானமே யஞ்ஞானமாம். பிரஹ்மம் மெய் உலகு பொய்.

ஆத்ம போதோப நிஷத் பழுதையிற் பாம்பு முதலன போல (கற்பிதத்திற்குச் சதந்தா மின்மை போல) உலகிற் காதார ரூபமாய்ப் பிரஹ்ம சத்து மாத்திரம் வியாபித்துக் கொண்டுளது; ஆதலிற் சகமின்ரும், கயற்றின் கண்ணரவு காலத் திரயத்தினு மெங்ஙனமின்றே அங்ஙனமே. அகங்காராதியாகப்பரந்தவுலகு அத்வயனுய என்பாலின்ரும்.

வராகோபநிஷத் சகம் யாவுஞ் சங்கற்ப மாத்திரத்தானே உளதாகின்றது, சங்கற்ப மாத்திரத்தானே சகத்தோற்றம். இன்னணம் பைங்களமுதலன பலவாம். சூதசங்கிதை யெம்பெருமானுற் புரட்டப்பட்டதென எம்பா லீந்துவிட்டதால் அதன்கணுள்ள அளவிறந்த பிரமாணங்களைக் காட்ட மனந் துணியவில்லை.

இலிங்கபுராணம் தியான விதிபுகன்ற அத்தியாயம் "விரிந்த பூதங் களினேடு விளம்பிந் தியங்கள் தத்துவங்கள், திருந்தாவகங்கா ரத்தினெடு செறிமுக்குணங்கள் மாத்திரைகள், பொருந்து மாயை சிவனிவை

பொய்யாம்யாமே பொய்யின்றி, யிருந்தெவ் விடத்து நிலைபெறுவோ மதனாற் ரூணு வெனவிசைப்பார்.

கூர்மபுராணம் சாங்கிய யோகமுரைத்த அத்தியாயம்"ஆதலாற் பிரம்மொன்றே நித்திய மலகைத் தேரிற் பேதுறத்தோன்று நீரிற் பிரபஞ்சமருண்டுதோன்றும்."

காசிகாண்டம்.

கானலிடைத் தெண்ணீருங் கபற்றினில்வா ளரவு மலை கடலிற் பட்ட, கூன்முதுகிப் பியிற்றோன்றும் வெள்ளியுமம் முதலுண்மை குறிக்கிற்றீரும், ஆனவை போல் நினையறியிற்றோன்றுசக மனைத்து நில்லா தழியு மாற்ருற், றேனவிழ்பூங் கடுக்கையணி செல்வநின தறைகழற்ருள் சென்னி சேர்ப்பாம்.

மகா இதிகாசமாய சிவரகசிய மாருவதம்சம் ரிபு கீதை. கானலிடைக் கற்பிதமாம் பேய்த்தேர்போலும் கனவினிடைக் கற்பிதமா முலகே போலும், ஞானகன மானபரப் பிரமத்தின்கண், ஞாலமெலாங் கற்பிதமாய்த் தோற்றலாலே. இத்திறத்தன அளவிறந்தனவாம்.

இராமாயணஞ் சுந்திரகாண்டம்.

அலங்கலிற் றேன்றும் பொய்ம்மை யரவெனப் பூதமைந்தும் விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற விக்

கம்,கலங்குவ தெவரைக்கண்டா லவரென்பர் கைவி லே ந்தி,யிலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவர்.

சிவஞானபோதம்.

உணருரு அசத்தெனின், யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின். உராத்துனைத் தேர்த்தென.

தேவிகாலோத்தரம்.

நீடிய தலைகா லெங்கு நிறைமயிர்த் தோலினாலே மூடிய வுடலுங் காணுங் கனவெனு முளத்த னாகி. தோன்றுவதெல் லாமசத்து. சத்தி பாதலந் தான்முத லீறதா வைத்தவைய மெலாமசத் தாதலால்.

திருவாசகம்.

மாயப் பிறப்பறுக்கும் மன்னனடிபோற்றி, பொய் யாயின வெல்லாம் போயகலவந்தருளி. இந்திரஞாலங் காட்டிய வியல்பும். இந்திர ஞாலம் போல வந்தருளி. இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை. பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப் பேய்த்தேர் முகக்குறும் பேதை குண மாகாமே தீர்த்தாய்.

மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதிக் திடா வகைநல்கினுன்.இந்திரஞால விடார்ப்பிற வித்துய ரேகுவ தாகாதே. பொய்யாய செல்வத்தே.

## தேவாரம்.

பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்றபுண் ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள், இம்மாயப் பெருங்கடலை. பொய்யினுன்மிடைந்தபோர்வை. பொய் விராமேனிதன்னைப் பொருளெனக்காலம் போக்கி. இங் ஙனமெண்ணிறந்தன மூவர்தேவாரத்துட் காணலாம்.

## திருமந்திரம்.

ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும். பொய்கண்ட மாமாயை. இன்னண மளவிறந்தனவாம். ஈண்டெலா மிவர் அசுத்தோபாதியையென நினைக்க லாம், சித்திலக்கணமியாவு மிச்சையேயென வேதாகம சம்மதமா மாதலி னங்ஙன நினையற்க.

## பட்டினத்துப்பிள்ளை.

மையாடு கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தீ,யையாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத் துள்ளே, மெய்யா யிருந்தது நாட்செல நாட்செலவெட் டவெறும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெ ல்லப் போனதுவே. மாயப் பேய்த்தேர் போன்றுநீப்ப ரு முறக்கத்துக் கனவே போன்று நனவுபெயர் பெற்ற மாயவாழ்க்கையை மதித்து.

## கந்தரனுபூதி.

இல்லையெனுமாயையி லிட்டெனை நீ. என்பனவா தியபலவாம் அருணகிரியார் வாக்கியங்களென்றுணர்க.

சிவஞான சித்தியார் ௬ - ம் சூத்திரம் உலகமெலா மலகைத்தேராம்.

தாயுமானவர்பாடல்.

பொய்யானவுலகத்தை மெய்யா நிறுத்திமென் புந்திக்கு ளிந்திர சாலஞ் சாதிக்குதே. அண்டபகி ரண்டமு மாயாவி காரமே யம்மாயை யில்லாமையே. இந்திரசாலங்கனவுகானலினீ ரெனவுலக மெமக்குத் தோன்ற. முற்றுமில்லா மாயையதனுல். தேகமான பொயை. ஐந்துபூதமு மொருகானனீரென. அகில மாயை கான்முயற் கொம்பே யென்கோ கானலம் புனலே யென்கோ வான்முகமுளரி யென்கோ மற்றென்கோ. ஜகம்பொய் யெனத்தம்பட்டமடியே. எனதென் பதும்பொய் யானெனல்பொய் எல்லாமிறந்த விடங்காட்டும், நினதென்பதும்பொய் நீயெனல்பொய் நிற்கு நிலைக்கே நேசித்தேன். கடத்தை மண்ணென லுடைந்த போதோ இந்தக் கருமச் சடத்தைப் பொய்யெனல் இறந்தபோதோ சொலத்தருமம். முற்றுமாயமாய். பொய்யாருலகம். சகமனைத்தும் பொய்யெனவே. அற்பமனமே யகில வாழ் வத்தனையுஞ் சொற்பனங் கண்டாய். பொருந்து சக மனைத்தினையும் பொய் பொய் என்று புகன்றபடி. கானற்சலம் போன்ற கட்டுழலைப் பொய்திர ஏன்பன

பலவாம். என்பன வாதியுரையாலோ உலகம் பொய்யெ ன்றே கொள்வதி லியாதுதா னையம். இவற்றின் கர்த்த ரான ஈசன் மகான்க ளிவரை யெல்லாங் கடந்தா விவர் மதிமான்; இத்துணையி னரும் பிராந்தரோ? இவருக் கொவ்வாத கற்பனையாதி பதங்களெத்துணை நூற்களி ற்று ளிருக்கின்றன. இவற்றையெல்லாங் காணார்போ லொழித்து நிந்தித்த லிவர் தருமமா? இவைமாத்தி ரமா? இதற்காக மானம் அளவிறந்தன வுளவென வறிக. மற்றவையெல்லா நிற்கத் திருவாசகம் சிவஞான சித்தி தாயுமானவர் என்பன இவர் சிரமிடங் கொண் டவையன்றோ? இவற்றுளிப்பதங்களை யாவர் புகுத்தி யிந்நூற்களை மாயாவாத நூற்களாக்கி அவற்றைக்கொ ண்ட விவரையும் மாயாவாதியாக்கிக் கெடுத்தாரோ வறியேம். இவர் காணின், இலகுவில் விடார் போ லும். அப்பதங்கள் வாய்ந்த சர்வசாராதி யுபநிடதங் களை மாயாவாத நூலெனவழங்கி யிவரிந்நூற் படித்து மாயாவாதி யாகாது தப்புவது யாங்ஙனமோ அறி ஞரே யறிக. புராணாதிகளி லிப் பதங்களுளவாதலி னவையு மிவர் முறையே மாயாவாத நூலாயின. வியா கரணாதியிலு மப்பதங்கள் "அசத்து மிருக திரு ஷ்ணுவத் கந்தர்வ நகரம் யதா" எனக் காணப்பெறலால்

மாயாவாதமாம். இவற்றையெல்லாங்கற்றுவிற்பன்னராய
விவர்மாத்திரம் மாயாரகித வாதியாவ தியாங்ஙனம்? இங்
ஙனம் பிரபஞ்சத்தைப் பொய்யெனப் புகலும் மாயா
வாதத்தைத்தாணு சகற்சத்திய சகுணபாசுபத பிராம்பி
பாவனைக்குச்சாதனமெனவரைந்தார். மிகவுமறிவுண்மை
யையன்றோ விது விலக்கும். அம்ம! அம்ம! இவர்மதியே
மதி! இருடிப்புரோக் தங்களாய அஷ்டவக்ரர் கீதை அவ
தூதகீதைமுதலன வெல்லாம் மாயாவாத மென்னு மிவ
ரெத்தகையரோ! இவர் தாமா சர்வதரிசன சிரோரத்ன
பூதசாங்கர தரிசனத்தை மாயாவாதஞ்செய்யும் மகிமை
யர்? இனிக்கடாகாச மடாகாசங்கள் ஒவ்வாததைக்காண்
போம். இவர் மூலராய சிவஞான சுவாமிகள் பரமப்
பிரமாணமாய் மறித்து மறித்து மெடுத்து மேற்கோளா
க்கியுள்ள சர்வஞ்ஞானோத்தரத்திற் கூறுங் கடாகாச
மடாகாச திருஷ்டாந்தமே யிவர்க்குப் போதிய சான்
றெனப் போதருமென்க. எனவே, அதுவும் மாயாவாத
மாம். ஆகவே அம்மாயாவாத நூலிவர்க்கு மிவர்முன்
னோர்க்கும் பரமப் பிரமாண மாயது யாங்ஙனம்?
ஆயின் அதையும் பிரக்ஷிப்த வாக்கிய சம்பந்தி யென்ப
ரேயெனின், அவரெஃதைத்தானுதலவில்லை யிதனை மாத்
திரங்கடாவ. கடத்துறை வானுமக் கடமுடைக்கின்

வான், இடத்தொடு மொன்றுபட் டிருக்குமாறுபோல், சடத்துறையுயிருமச் சடந்தணக்கினீங், கடக்கரும் பர த்திறெனன்ருகிவைகுமே"எனவைணவர்தம் பாகவதத் தயாப்பினுமா எமது சங்கரப் பெருந்தகை திரிபு செய் தது? ஆமெனின், "அன்பினுயினுமாசையினுயினும்வன், பயத்தின் வயிரத்தி ஞயினும்" என்றபடி இவருஞ் சங் கர கிருபைக்குப் பாத்திரரென்றே அறிஞான் மதிக்கற் பாற்றும். கடாகாசங் கசப்பேற் பின்னென் வேண்டற் பாலதோ நம்மன்பருக்கு? ஒன்றென்றுமா? ஆதற்குத் திருஷ்டாந்தம் யாது தான் வைத்துளர். இரும்புதங்க மாதன் முதலிய நிதரி சனங்கள் யாவு மெண்ணிறந்த தோடக்கிரஸ்தமாமென விவ ரறிந்து கோடலன்றி ஆக்ஷேப மிருந்து வரையின் மறுப்பாம். இனிக் குறளி வித்தையைக் கொணர்ந்து புகட்டி யென்று கூறத்துணிந்ததை நோக்க வியப்பினும் வியப்பைத் தாராநின்றது என்னே? இவர் தாமே குறளி வித்தைக் குட்பட் டுலகை மெய்யென வுழன்று வந்தவழியு மினிப் போம் வழியு மிஞ்ஞான் றிருந்துழலும் வழியு மறியா திடர்ப்படுதலை யறியார் போலு மென்க. இனி இவர் மூலபுருடர் பசு பதிகளைக் கொன்றுரென்றன் றேறு கூறினர்; அதனைச் சற்றுராய்வாம். பதிபசு வபா

பரியாய பரசீவர் பொய்யென வுபநிட தங்களுடும் மற்றவற்றாடும் பன்னப்பட்டதை ஸ்ரீ சககுரு நாயக னுந் திருவாய் மலர்ந்தருளியது முண்மை தான். அதற் கென்? இவருக்கு வேதாந்த ஆசிரியர் யார்? எவர்பா லிவர் சிசுருஷை யாற்றி அந்த வித்தையைப் பெறலாயினர். அங்ஙன மின்றே லதனுண்மையை யிவ ருணர்ந்ததுதா னியாங்ஙனம்? வக்தாவினபிப்பிராயம் முன் பினின்றி யுணரல் தகாதென லிவ ரறியாததா. ஒரு குழவியைத் தாய் நோக்கி நின்னைக்கொன்று விடு கின்றேன் பாரென்னில் தாயின்றாற்பரியங் கொல்லல் தானே? அஃதே லேன் பிரயாசை யெடுத்துப் பெற்று வளர்க்க வேண்டும். அற்றேல் சிவேசர் பொய்யென்ற தென் கொண்டோ வெனின், நுதலுதும். சீவனென் னும் பதார்த்தத்திற்குச் சிற்பாக மெனவும் சடபாக மெனவு மிரண்டுள; அவற்றுட் சேதனபாக மிலக்கணை யாற் கோடற் பாலதாம்; சடபாகமோ வீடற் பாலதாம். கற்பனை யாதலின் அங்ஙனமே ஈசனுக்கு மென்க. எங் ஙனம்:—ஒரு புருடனுக்கு மகாதேவ னென்று பெய ராக நடிப்பான் அரிச்சந்திர வேடம் புணரின் மகா தேவத்வ அரிச்சந்திரத்வ விசிட்ட அவனுக்கு அரிச் சந்திரத்வத் தகைமை பொய்யெனப் புகலி னவனையே

யில்லை யென்று சொற்றதாமா ? அல்லது கோறலாற்றி யது தானுமா? இத்துணை ஓராமல் கொன்றூ என் றபவாதங்கூறல் விவேகியர்க் கழகன்றன்றே! தாமாய் வேதாந்த நூலோதத் தொடங்கின், மனம் போன போக்காய்த் தான்போ மிதி லென்னையம். ஆதலினாற் றான் சாதன நான்குற்றோனல் நாற் பணிகளுங் குரவ னுக்காற்றி யருள் சுரக்கு ஞான்று சிரவணஞ் செய்யு மாறு நூற்கண் விதித்துளது. இஃதிவரறி யாததா? அறியினேன் இங்ஙனம்? சங்கர மதத்வேஷமே யன்றி வேறேதுவைக் காணவே காணேம். சர்வரிஷி சம்மத சர்வதேவதா சம்மத சர்வமத சிரோரத்ன பூத உபநிஷத்சார சங்கர தேசிகானுக்ர கீத அத்வைத மதத்தில் அருசியுண்டாங் காரணம் பிரமதேவரே யரு ளிச் செய்துளார். "வேதநூன் மிருதி புராணமத்து வித மெய்ம்மையே விளம்பமெய்த் தர்க்கஞ், சாதியா நிற்கத் தத்துவ ஞானத் தவருமிப் பொருளையே சார, ஆதியாஞ் சிவனு ராயண னனு மறைந்தது மபேதமாயி ருக்க, வாதியா மொருவர்க் கிதையனு தரித்தன் மா யையி னுடையவல் லபமே" என்பதாம். இனி ஈசகேனு திகள் வேதாந்த சூத்திரத்திற் காதாரமெனத் தொடுக் கின்றார்; தொடுக்கவே சர்வ சாராதியன் றென்றன்றே

விவர் கருத்தாகின்றது. அதனை யாரில்லை யெனப்புகன்றார். வேதாந்த சூத்திர மென்பது வையாசிக நியாயமாம். யாதின் பொருட்டோ வெனின்? வெட்ட வெளியாய் விளங்கலா முபநிடதங்களொழித் தொழிந்த வற்றின் மாட்டுண்டா மையங்களை நிவிர்த்திப்பான் கிளம்பியதாம்; அதுவும் உபக்கிரம உபசங்காராதி லிங்கங்களாற் ருற்பரியங் கவரற் பாலதாம். அதனது தாற்பரியமும் அத்வைதத்தின் கண்ணேயென "அத்வைதமேவ சூத்ரார்த்தம்" - சூத்திரப்பொரு ளத்வைதமே; யெனமகேதிகாசமாய சிவ்ரகசியத்தாற் பெறப்படும். அப்பிராஹ்மண னென்புழிப் பிராஹ்மணனல்லாதவ னென்றன்றே பொருள் படும். அதனாலென் மறையோனுக்கேயின்மை நேருமா; அஃதே போல் அத்வைத மென்புழியும் த்வைத மற்றதெனவன்றே பொருள் படும்; படவே, த்வைதஇன்மை நேரலின்றுமெனிற்படு மிழுக்கென்னையோ வெனின், அற்றன்றும்; என்னை? ஸ்ரீ சங்கர தேசிக ராவதாரப்பிரகாணத்தே அச்சப்தங் கிளம்பியிருத்தலினானும் அம்மொழிக்குப் பொருள் கோடுழியும் "நேகநா நாஸ்தி கிஞ்சன" ஈண்டற்படு நாநா இல்லை என்பன வாதி நூற்றுக்கணக் காய சுருதியாதரங்கொண்டு இன்மைப் பொருளையே நுதலியருளியிருத்தலினாலும் ஆரோப வத்துக்கட்கு அங்ஙனமே

அுறைதல் நியாயமாயிருத்தலினுனும் ஆரோபங்கற் பனே மித்தை யென்பதை முன்பே காண்பித் திருப்ப தாலிஞ்ஞான் ருசங்கைக்கிடனே யின்மையானும், சுத் தியின்கண் ணிரஜதாரோபங்கண்டு தீர்வுழி "இதமர ஜதமென" உளதாயின் அரஜத மென்பதற்கு ரஜத மல் லாததெனப் பொருள் கொண்டு ரஜதோபஸ்திதி கோ டல் அறிஞரியல்பன் ருதலினுனும் இன்னும் பல பிர பல சுருதி யூகங்களானு மென்க. அற்ருயினும் துவித இருப்பென் சத்தாயா? அசத்தாயா? இருதிறனுயா? ஆதியதேற் சிவம் பரிபூரணப் பொருளாய்ப் பரிபூரணத் திற்கே யானியாம். ஆகவே வத்துவிற்கே ஆனியாம். ஆகவே நாத்திகமே வந்தெய்தும்; இடையதேல், மலடி மகனுலியாதொரு பாதையு மிலாத தொக்க இவ்வசத் தாய துவிதத்தா லத்துவிதத்திற் கானியின்ரும். இன் ருகவே அபரி பூரணத்வமு மின்ரும். இறுதியதேல், முரணுய விருதிறன் ஒருபொருளின்மாட் டுண்மை புணர்வாற் கவரலேலாதாம். இவ்வணமாகவே சதசத் விலக்கண அநிர்வசநீய மென்றே கோடல் வேண்டும். கோடவே, அத்துவிதத்திற் கானியின்ரும் இன்ருக வே அபரி பூரணத்வமு மின்ரு மென்க. அற் றேல் நிர்வசனமாயேனு மொரு பொருள் பிரதீதி கொண் டடன்படி லுமக்கத்துவிதஞ் சித்தித்தரு

ணியாங்ஙனங்கொல்லெனின்? உணர்த்துதும். சமசத்தைக்கே பாதக பாத்தியமன்றி விடமசத்தைக் கின்றும்; இங்ஙனமாகவே கானற்சலம் தன்னதிட்டான பூமியைப் பங்கமாக்காதென்பது திண்ணமாம்; ஆகவே அஃதொப்பத்துவிதத்தானு மத்துவிதத்திற் கானியின்றெனத் திறமுறவுணர்க. இனிச் சிவேசகற்பனை ஈசகேனுதியிலில்லை யெனவு மங்ஙனம் புகுத்திற் சிவத்துரோகமெனவும் புகன்றார். அக்கற்பனை இயல்பா யவ்வுபநிடதங்களில் அமைந்துள்ளனவே யன்றி இவரைப்போற் புகுத்துஞ் சமர்த்த ரின்றென்க. அச்சமர்த்தாற்றான் யாவர் மாட்டு மிவர்க்கிம் மதியுள தாகின்றது.

சிவேசகற்பனைக்கு முன்பே பொருள் கூறியிருத்தலி னீண்டுவரையாது விடுப்பாம். சிவத்துரோகம் வருமென்றானன்றே, சிவாபராதிகட் கன்றே சிவத்ரோகமுறும். சிவேசரின் வாச்சியங்களைந்து இலக்கியங்கொண்டு அவ்விலக்கிய சிவத்திற்குற்ற திரிவிதபரிச்சேதங்களை நாக்கி யச்சிவத்திற்குப்பரிபூரண பட்டாபிஷேகம் செய்யுஞ் சிவசங்கர தேசிகர் சிவத்ரோகியா? அல்லது பதியை விபுவாய்க் கூறுவதோடு பாசங்களையு மங்ஙனே நுதலிப் பசுக்களையு மங்ஙனே நுதலி, பாசபசுக்கள் நின்றவிடம்போகச் சேடவிடத்தே சிவத்தை

வைத்து அபரி பூரணமாக்கி அதால் நாசமாக்கு மிவர் சிவத்ரோகியா! அறிஞரே உய்த்துணரல் வேண்டும். இம்மட்டோ உய்த்துணர்தல் மூன்றும் வலிதிற்கண் டப் பொருளாய் அநித்தியமாய் முப்பொருளுமிழந்து சூனியவாதியாதலு முய்த்துணர்க. இது நிற்க, இனிப் "பிரம சூத்திர மெனப்படும் வேதாந்த சூத்திரங்களின் தாற்பரியம் சகுண சிவத்திலேயாம்" என்று தீக்ஷித யோகியர் கூறியவா" றென்றார். இது,முன்பின்னுணர்ந் தும் மோசஞ்செய்ததேயாம்! என்னை ஸ்ரீதீக்ஷிதயோகி யர்ஸ்ரீநீலகண்டபாடிய சிவார்க்கமணிதீபிகையாய தமது வியாக்கியானபீடிகையின்கண் 'அத்வைதத்தின்கண்ணே புராண ஸ்மிருதி சமுதாய பாரதாதி நிபந்தங்களோடு சுருதி சிகரங்கட்கு மாகமங்கட்குந்தாற்பரியம் பிரஹ்ம சூத்திரங்கட்கு மாங்கேவிசிராந்தி யெய்துகின்றது;பிரா சீன ஆசார்யரத்னங்களாய ஸ்ரீசங்கராதியரானு மதுவே கூறப்பட்டுளது. அங்ஙனமாயினும் தருணேந்து சிகாம ணியின் றிருவருளானே அத்வைத வாசனை புருடர்க் குண்டாம். திருவருளும் தேவிசகிதமா தேவனையுணர்ந்து தியானிப்பார்க்கே கிட்டுமென்பதை வியாசபகவானுங் காண்பித்து வைத்தருளினர். ஆதலினாலிந்தப்பிரஹ்ம சூத்திரங்கட்குச் சகுண சிவத்திற்றாற்பரியத்தைப் பிர

கடீகாணஞ்செய்வான் ஆசிரியர் உத்தமபாடியத்தையுரைத்தார் என்று கூறியருளியுள்ளார்; அதனி லிவர் முற்றினுங் காண்பிப்பின் நங்குட்டு வெளியாய்விடுமெனக்கருதி முன்னும்விட்டுப் பின்னும்விட்டுநனந்தலையிற்காட்டினார். காட்டியதினும் "தநிதம்" என்பதின் பொருளான ஆதலினாலிந்த என்பதை எழுதாமலும் விட்டார். என்னை? ஆதலினாலெனின் முன் றொடர்புவருமென்றே யன்றோ! இவ்வித மோசடி செய்வான் றுணிந்தவரென்ன தான்செய்யார் செப்பார்? அறிஞரேயுணர்க. இங்ஙனம் தீக்ஷிதயோகியர் சிவார்க்கமணி தீபிகை ஆனந்த லஹரி முதலவற்றுட் டம்பரமதாற்பரியம் தரிசிப்பித்ததைக் காண்பதன்றி ஸ்ரீ தீக்ஷிதயோகியர் தம் பரமதாற்பரியம், நிர்க்குண நித்த சுத்த புத்த சத்திய பரமானந்தாத்வைத சிவத்தின்கண்ணே யென்பதை ஷியோகியரியற்றிய நியாய ரக்ஷாமணி, பரிமளம், வேதாந்த சித்தாந்த லேசசங்கிரகம், நியாயசித்தாஞ்ஜன முதலவற்றை ஆசிரியர்முகமா யோதியுணர்வாராக. அன்றியும், சாதன பாகங்களிற் சில நூற்களியற்றி அவற்றை யனுட்டிப்பானுற்கிருட்டங் கூறியதுகொண்டு அவ்வியோகியரின் பரமதாற்பரியத்தைவிட லறிஞர்க் கணியன்றாம். கபில கணாத கௌதம ஜைமினி பதஞ்சலியாதியர்மயலினான்

றன்றோ! அவர் தங்கூற் றென்றற்கொன் றெத்துணை விலக்கண முற் றிலங்கா நின்றது. அது கொண்டே யவர் அவ்வக் கூற்றின் கருத்தினரேயென அறிஞரா லெள்ளற் குரியராவரா? அங்ஙனமெள்ளற் குரியரே லவரைவிதந்து ஞானிக ளெனவோதும் புராணேதி காசங்கள் பொய்யுருவா? அவற்றைப் பொய்ப்படுத்த லறிஞர்க் கேலுமா? ஏலாதாகவே, அவரது பரம தாற் பரியம் சுத்தாத்வைத நிர்க்குணப் பிரஹ்மத்தின் கண்ணே யென்பது வெள்ளிடை மலைபோலன்றோ விளங்குகின்றது. இப்பரமதாற்பரிய முடையரேனும் தத்தம் மதத்தி லேதாவது உற்கிருட்டக் குறைவுபா டுளுற்றியுளரா? இல்லவே யில்லையன்றோ? இவர் மாத்தி ரமா! ஸ்ரீ ஆசார்ய வாசஸ்பதியாரும் (இவர்பிரமதேவர் பிரகற்பதி யென்னு மிரு கூறுற்றவர், உலகானுக் கிர கத்தின் பொருட்டுச் சிவாஞ்ஞையாற் பிரமதேவர் கூறும், உலகாயதமத நிர்ம்மாண தோஷ நிவாரணத் தின் பொருட்டுப் பிரகற்பதி கூறு மமைந்ததென் றுண ர்க) ஸ்ரீ வித்தியாரண்ய முனிவரும் சருவ ஆத்திக தரி சன கருத்தராயிருப்பினும் அவர் தம் பரமதாற்பரிய மத்வைத சிவத்தின் மாட்டேயென்பது யாவர்கொ லறி யாதார்? இங்ஙனமளவிறந்த நிதரிசனங்க ளிருக்கின்றன வென்பது பிரசித்தமாதலின் விரித்தது சாலும். இன்

னுங் "கூறியவாறு பிரமமீமாஞ்சை 1-2-2 ஆஞ் சூத்திரத்தில் "விவக்ஷித குணோபபத்தேச்ச" உரைக்கப்பட்ட (சத்திய சங்கற்பத்வ சர்வகாமத்வ குணங்கள் பொருத்தமாதலினால்" என்றும் 1-2-15 ல் "சுகவிசிஷ்டாபி தானுதேவச" அவர் ஆனந்த விசிட்ட குணமுடையராகவே கூறப்படலானும்" என்றுங் கூறினர். மேற்றரிசிப்பித்த சூத்திரங்கட் கிவர்கொண்ட வண்ணமேனும் மற்றையமதஸ்தர்கள் கொண்ட வண்ணமேனும் பொருள்கூறுக: அதனாலெம்மனோர்க் கியாதொரு பாதகமுமில்லை யென்க. என்னை? அவ்வர்த்தங்களனைத்தையும் ஓரோரம்சத்தாற் சாதனமெனக் கொண்டிருத்தலி னென்க. ஆயி னிவற்றி னுண்மைப் பொருடானியாதுகொலோவெனின்? சுருக்கிவரைகுதும். "சர்வத்ரப்ரசித் தோபதேசாத்" யாண்டும் வெளிப்படை யுபதேசத்தால் 1-2-1 ஆஞ்சூத்திரத்தில் சாந்தோக்கியத்தே சாண்டில்ய வித்தையின்கண்" மனோமயம் பிராண சரீரம்பாரூபம்" என்பதாதி கேட்கப் பெறுகின்றதன்றே! ஆண்டென் மனோமயத்வாதி குணகனுய சாரீரன் உபாஸ்யத் தன்மையானே உபதேசிக்கப் பெறுகின்றனனு? அல்லதென் பரமான்மாவாவென ஐயம் நிகழுழி, சாரீரனெனப் பூர்வபக்கமாயது; சித்தாந்தமோ:—பரப்

பிரஹ்மமேஉபாஸ்யத்தன்மையானுபதேசிக்கப்பெறும். யாங்ஙனமாலோவெனின்? யாண்டும் வெளிப்படையுபதேசத்தான், எல்லா வேதாந்தங்களூடு எவ்வெளிப்படைச் சகத்காரணப் பிரஹ்ம முளதோ, அதற்கே யீண்டு "சருவம் துணிபாய்" என்பதாதியா வுபதேசத்தாலெனவருளி, இதனுனும் பிரஹ்மமே யீண்டுபதேசிக்கப் பெறுகின்றதென்றருளுகின்ருர். "விவக்ஷிதகுணோபபத்தேஸ்ச்ச" (உரைப்பானவாவிய குணவொற்றுமையினுனும்) என்னும் 1-2-2 ஆஞ் சூத்திரத்தே, உரைப்பானவாவிய "பாரூபன் (ஒளியுருவன்) சத்தியசங்கற்பன்" என்பனவாதியில், உபாசனையின் மாட்டுபாதேயத் தன்மையானே யுபதிஷ்டமாய எக்குணங்களுளவோ சத்திய சங்கற்பத்வாதிகள், அவ்வற்றிற்குப் பிரஹ்மத்தின் கண்ணே யொற்றுமையினு னென்பது பொருளாம். ஜீவாசாதாரணமாய மனோ மயத்வாதிக்கும் சத்திய சங்க்றபத்வாதி யனுரோதத்தான் சர்வான்மகப் பிரஹ்மத்தின்கண் ணொற்றித்தலி னென்க. ஆதலி னக்குணகப் பிரஹ்மமே உபாஸ்ய மெனத் துணியப்பெறும். அற்றேன், மாறுயாகாததென்கொலோ வெனின்? அற்றன்றென் றருளிச் செய்கின்ருர் "அனுபபத்தேஸ்து நசாரீர:" (ஒற்றுமையின்மையினே சா

ரீரனன்றும்) என்னும் 1-2-3 ஆஞ் சூத்திரத்தில், சத்திய சங்கற்பத்வாதிகட்குச் சீவன்பாற் சாமஞ்சசியமாயொற்றுமையின்மையின், சாரீரன் ஜீவன் அத்தருமத்தா னுபாஸ்யமன்றும்; மற்றோ பிரஹ்மமேயென்பதாம். இதனானே பிரஹ்ம மியல்பானே சர்வகுண வர்ச்சிதமெனவும் உபாசனையி னிமித்த மதிகாரி பேதத்தானே குண வொற்றுமை யுடன்பாடெனவுந் தெற்றெனவிளங்குகின்ற தன்றோ! இனி மற்றதையு மாராய் வாம். அந்த ராதி காணத்தில், "அந்தர உபபத்தே:" என்னும் 1-2-13 ஆல், அந்தர:, அக்ஷிமத்ய கதபரமான்மாவே "எவ்விவ்வக்ஷியின்கட் புருடன் புலப்படுகின்றனனோ" என்னும் சாந்தோக்கிய உபகோசல வித்தையின்கட் கேட்கப்பெறு மந்திரத்தா னுபதேசிக்கின்றது. யாங்ஙனங் கொலோ வெனின்? உபபத்தே:, ஆன்மத்வ அமிருதத்வ அபயத்வாதியவா யீண்டுரைத்தவற்றிற்குப் பரமான்மாவின் மாட்டே யுபபத்தியிருத்தலினென வருளி சர்வகதத்திற் கற்பாக்ஷித்தானஞ் சம்பவியா தெனக்கடாவ, "ஸ்தாந திவ்வியபதே சாச்ச" என்னும் 1-2-14 ஆல், ஸ்தாநாதிகட்குபாசனார்த்தத் தன்மையானே வியபதேச மிருத்தலினீண்டும் பரமான்மாவிற்கு அக்ஷிஸ்தாநாதி வியபதே

சம் ஏலாத தன்றுமென வருளிப் பிரகரணத்தானும் அக்ஷிக்கட்டிதப் பரமான்மாவே உபதேசிக்கப் பெறு மென வருளிச்செய்கின்றார். "சுகவிசிஷ்டாபிதானு தேவச" என்னும் 1-2-15 ஆஞ் சூத்திரத்தே "பிராணன் பிரஹ்மம் கம் (சுகம்) பிரஹ்மம் கம்பிரஹ்மம்" என்னும் வாக்கியோபக்கிரமத்திற் செவி யுறுத்தற் பெறுவதாய எச்சுக விசிஷ்டம் பிரஹ்மமோ அதற்கே யீண்டபிதானத்தானென இதனுனே பிரகரணத்தாலிவ் வந்தராதிகரணப் பூர்வபக்கமாய பிரதிபிம்போ பாஸ்தியை மறுத்துப் பிரஹ்மோ பாஸ்தியே நுதலப் பெற்றதாம்; ஆகவே "விவக்ஷித குணோப பத்தேஸ்ச்ச" என்பதானும் " சுகவி சிஷ்டாபி தானு தேவச " என்பதானு மிவருக்குற்ற விலாபம் யாதோ! ;மற்றையர்போற் சாதன பாகத்தின் கண்ணே வைத்துக்கொள்க; அதனை யாரே தடிகொண்டு தடுப்பார்! அம்மாத்திரையானே துவிதபரமாத்திரமாய் விடாதெனத் திடமாயறிக. இஃதிங்ஙனமாக, இதன் பின்பிரகரணத்தா லக்ஷித்திதத்திற்குப் பிரஹ்மத்வ முரைத்தருளி லிங்கத்தானுமதனே யருளுகின்றார். " ஸ்ருதோப நிஷத்ககத்யாபிதானுச்ச" என்னும் 1-2-16 ஆஞ்சூத்திரத்தை உபநிடதரகசிய பிரஹ்மவிஞ்ஞானங் கேட்டானுக்குரிய தேவயான மெனப்

பெயரியகதியானது சுருதிகளுடும் ஸ்மிருதிகளுடும்பிர சித்தமாம். அக்கதிக் கீண்டும் "ஆதித்யனினின்றுஞ் சாந்த்ரமசம்" என்பதாதியிற்புகன்றிருத்தலின் அக்ஷித் திதத் திற்குப் பிரஹ்மத்வம் இனிது துணியப் பெறு மென்க. எனவே "1-2-16 ல், 'அதைவச பிரஹ்மஃ' (ஆனந்தகுண விசிஷ்டமுடையராகக் கூறப்படும்) அந்த நியாயத்தினுல் அவர் பிரம்மம்" என்றுர். இச்சூத்திரம் நுதலியதென்? எந்தச்சுருதியைத் திரமாற்ற விஃதெ ழுந்தது? இஃதில்லாதொழியினவ்வதிகரணத்தே யென் னகுறை வெய்தும்? இஃதெல்லாங் காட்டாமற் சூத்திர த்தையேன் வாளாகிறுக்கினுர்? பிரகரணத்தாற் ருபித்து லிங்கத்தாற் ருபிக்கு மிடையே இதுவரக் காரணம் என் வரையாது விடுத்தார்? கூத்திற் கோமாளி வந்தொக்க இச்சூத்திரத்தைக் கொணர்ந் திவண் புணர்த்தியதை யாராயு மியாவர்தாம் நகையார்! இத்துடனிராம லிவர் இதற்கொரு டிப்பணி "இந்தச் சூத்திரந் தங் கருத்திற் கிசைய வலிக்கப் படாதென்று கண்டுபோலும் அத னைத் தமது பாடியத்தினின்றும் தொலைத்து விட்டார் கேரளசங்கரர்" என வரைந்துளார். யாதொருபயனு மின்றியிச்சூத்திரத்தைக் காட்டி விட்டதுமன்றி ஸ்ரீம ந் மகாதேவ லீலாவிக்கிரகத்தின் மாட்டுங் துவேஷப்

பட்டனர். இச்சூத்திரமெய்யே விஃதுள்ள அதிகாணப் பெயரையும் அதற்குரிய சம்பந்தம் விஷயம் ஐயம் பூர்வ பக்கஞ் சித்தாந்த மென்பவற்றையும் காட்டாததென் கொண்டோ! சூத்திரத்தைத் தொலைத்து விட்டதென் பது பெருந்தோடமன்ரு! அதைத்தாபிப்பான் அனேக நியாயங்களன்றோ எடுத்துக் காண்பிக்கவேண்டும். அஃ தெலாமின்றிச் சூத்திரத்தை மாத்திரங்காட்டி யாபாசப் பொருளைத் தீட்டி விட்ட திறம்பூதிற்கே யிடனும். இங்ஙனம் பொறிப்பினுண்மைதானென மருண்டு அறி ஞர் திகைப்பரென்ரு? உண்மை யாய்வ ரொருகாலும் மருண்டு திகையாரன்றோ! இச்சூத்திர உண்மை பற்றி யிவர் வேண்டும் வரையும் வரையினும் புரையே யாம். இனிச் சகுணம் மேலென் றிவ ரெகிரு கின் றன ரன்றோ! அதனையுஞ் சற்ருய்வாம். யாது சகுண மோ அஃதழிவெய்தும்,நீலோற்பலம்போல். அற்றேன் முன் ஈசன் கற்பனை யன்றென்பதோடிது முரணுதோ வெனின், முரணுவதியாங்ஙனம்! ஈண்டும் வாச்சியமே யொழித்தலான். ஆநந்தாதிகள், பின்ன குணங்களா? சொருபகுணங்களா? ஆதியதேல் இயற்கையா? செயற் கையா? செயற்கையென்னின்? எத்தா லெக்கா லென வியம்ப வேலாதாம். ஏலினு மழிவதிலையமின்ரும். இய

ற்கையேல்! பின்னமா? அபின்னமா? அபின்னமெனின், குணகுணி வியவகார மியாங்ஙனம்? குணகுணி சம்பந்த மியாங்ஙனம்? இவற்றினே துவாயவேற்றுமைதானியாங் ஙனம்? பின்னமெனினே? சத்தாயா? அசத்தாயா? சத சத்தாயா? ஆதியதேல் அபரிபூரண தோஷவாயிலாய் நாத்திகமே னிவர்க் கெய்தாது? இடையதேற் பயனெ ன்? கடையதேன் முரணன்றே! மற்றதேல்? சொரு பத்தை விட்டவையென்? குணவழக்கமு முபசாரமன் றிப் பின்னென்னும்? இங்ஙனமோரின், வேரின்றிமாயுமி வர் சகுணதருவை வேதவாதியர்முன் காண்பியா தொ ழிவதே யிவர்க்கு மிகுபயனுடைத்தா மென்க. மேலு மிவர்தாமே "ஞான மூர்த்தியாகிய மகாதேவர் சச்சி தானந்த குணமுடையர்" "சத்தியை விட்டுச் சரீரமில் லை" எனக்கூறினர். இவற்றுட் பின்ன தெமக்கு முடன்பாடே, அதன்கண் யாதோர் விவாதமுமின்றும். முன்னதோ முரணும். என்னை? ஞானமூர்த்தி யெ னின் ஞானவடிவ னென்பது பொருளாம். ஞானவடிவ னாகவே உண்மை வடிவனும் சுகவடிவனுமாவ னென் பது திண்ணமாம். ஞானவடிவனு யொப்பி இன்மை வடிவனுயுந் துன்பவடிவனுயு மொப்புத லிவரே செய் யார். செய்யினே மகாதேவ னசத்தாய்த்தாம் நாஸ்

திகான்றே ஆமாறு நேரும். சச்சிதானந் தங்களுந் தம்மு ளொற்றித்தே யிலங்கு மென்பது நூற்றுணி பேயன்றி யனுபவமுமாம். ஆகவே, ஞானவுண்மை யின்ப வடிவனை அக்குணனுகச் செப்புத லியாங்ஙன மியையும்? ஞானமூர்த்தி யென்பதற்கு ஞானகுணமுடைய மூர்த்தியெனக் குணியா யொப்பி னியாதுகொல் பயமெனின், நுதலுதும். ஞானகுணமுடைய மூர்த்தியென நுதலி அவன் சற்குணமுடையான் சிற்குணமுடையான் (ஞானகுணமுடையான்) சுககுணமுடையானென நுதலுதன் முரணன்று; என்னை ? ஞானகுணமுடைய மூர்த்திக்குப் பின்னேன் ஞானகுணமுடைமையைத் தாபித்தல்வேண்டும்? தாபித்நலா லென்கொலோபயன்? உமிக்குத்திக் கைசலித்த லன்றே வொக்கும். அன்றியுஞ் சச்சிதானந்தத்தைக் குணமெனக்கோடின் குணியாம் பொருளின் வடிவயாது, வடிவில்லதது, அதற்கே குணமெனக்கூற வியையுமா? சற்பொருட்குக்குணமா? அசற்பொருட்கா இவர்கூறுதல்? சற்பொருட் கெனின், சற்குணங் கூற லமையாதன்றே ! அன்றியும் பயனில் கூற்றுமாமன்றே! அசற்பொருட்கெனின்? மலடிமைந் தனுக்கேன் கூறலமையாது? இருமையதற் கெனினே முரணன்றேவாம்? ஆதலிற் சச்சிதானங்கள் சொரூ

பமே யன்றிக் குணமெனக்கூற லரிபிரமாதியர்க்கு மிய லாதென்க. குணேபதேசம் பிரதிபத்தி சௌகர்யார்த்தமெனக் கொள்க. பிரசங்கத்தாற் கண்டித்தது சாலும். பிரகரணத்தே செல்வாம். முன்னவின்ற 1—2—16 ஆஞ்சூத்திரமுளதாமேல் "வியாச சூத்திரம் 555 என்னும் வழக்கழிந்து 556 ஆமே! அற்றன்று; இரண்டாவதத்தியாயத்தின்முதற்பாதத்தே ஒரு சூத்திரங் குறைவெனின் (சங்கரபாடம் 2-1-37 நீலகண்ட பாடம் 2-1-36) ஆண்டேன் கூடிய சூத்திரத்தே பூர்வபக்கஞ் செய்யலாகாது? அறியாமையானு? எடுத்துக்காட்டிவிட்டேமே இனியேனுங்கடாவுக.நிற்க, சாமானிய நிர்த்தேச முன்னுற்றியிருந்தாலன்றோ விசேஷந்தெரிவான் (அதைவச பிரஹ்ம)என்னுஞ் சூத்திரம் வேண்டும். "பிராணன் பிரஹ்மம் கம்பிரஹ்மம் கம்பிரஹ்மம்" என்னும் பிரகரணவிசாரத்தானே திரதரமாய் விசேடமுறப் பிரஹ்மம் சித்தித்திருத்தலின், இனிக் கூறும் லிங்கசூத்திரத்திற்கிடையே இச்சூத்திரம் என்னபயனைக்கொண்டு நின்றது. ஈண்டுத் தீக்ஷிதயோகியர் வியாக்யானத்தேயேன் சங்கரர் விட்டு விட்டாரெனக் கண்டிக்கலாகாது. இவரதவ்வளவுமதிவியாக்யானகர்த்தாராய அவர்கட்கின்று ! அதிகமென்றேன் நவிலலாகா

தோவெனின், ஸ்ரீகண்டர் பாடியத்தைத் தொட்டுவிட்டோமே, அவர் ஏற்றபாடத்தை யேன் கண்டித்தவமானப் படுத்தவேண்டும். பயனில்லாவிடினும் முராணின்றே னெனக்கருதியுரையிட்ட தென்க. இவ்விரகசியம் பரிமளத்தில் இச்சூத்திரத்தை யுடன்படாததாற் கண்டா மென்க. பரிமளாதி மாயாவாதியராய வுங்கட்காக வாற்றியதெனின், ஏன் ஆற்றவேண்டும். ஏன் மாயாவாதியாக வேண்டும். அத்தகைய மாயா வாதியை யிவர்தான் ஏன் நம்ப வேண்டும்? ஆற்றினு மாதரவாயாற்ற வில்லையெனின்? அற்றறையற்க. என்னை? கற்பதரு வியாக்யானம் பரிமள மாரம்பிக்குங்கால் அக்கற்பதரு தரும் அர்த்தங்களேகொண்டு என் மதியைப் பரிஷ்காரஞ் செய்ய முயல்கின்றே னென்றமையானும், வேதாந்த சித்தாந்த லேசசங்கிரகத்தே ஆதியில் ஸ்ரீ பகவற்பாத முகாம்புஜ நிர்க்கதபாடியமென விதந்தோதிப் போற்றினமையானும் மற்றவற்றானுமென்க.

இனி 1 - 2 - 19 ல் "அந்தரியாமி அதிதெய்வாதிஷு தத்தர்ம வ்யபதேசாத்" "தேவர்களினும் உலக முதலியவைகளினும் அந்தரியாமியா யிருப்பவரவரே, அவர் குணங்கள் கூறப்படலா னென்றும், 2-1-36 ல் " சர்வ தர்மோபபத்தேச்ச " சர்வ குணங்களு மவர்

க்கே எய்தலானும் என்றும், 3 - 3 - 11 ல் "ஆனந்தா தய: பிரதானஸ்ய" முக்கியப்பொருளாய பிரமத்திற்கு ஆனந்தாதி குணங்கள் என்றும் சில காட்டினர். இவற் றுனு மிவருக்குப் பயன் சிறிதுங் கைவராதென்றே காட்டுதும். "அந்தர்யாம்ய திதைவாதி ஷு தத்தர் மவ்யபதேசாத்" என்னும் 1-2-18 ம் சூத்திரம் இவ ருக்கு 1 - 2 - 19 ஆயது ஒரு சூத்திரத்தை யிடை யிற் கற்பித்ததானென்க. இதன்பொருளோ:— ஈண்டுப் பூர்வ பக்கத்தில் பிரதானத் தினதேனும் யோகிஜீவன தேனும் உபாஸ்தியாம்; சித்தாந்தத்திலோ பரமான்வி னதேயெனப் பலபேதமாம். பிருகதாரண்யகத்தின் கண் "யாவன் பிருதிவியிலிருந்து.........பிருதிவியை உள்ளேவுகின்றனனோ இவன் நின்னுன்மா அந்தரியா மி யமிருதன்" என்பதாதி கேட்கப் பெறுகின்றன. ஆண்டு அந்தர்யாமி, பிரதானமா, அல்ல தணிமாதி விசிஷ்ட ஜீவனு? அல்லதுதானென் ? பரமான்மாவா வென வையம் நிகழுறிப் பிரதான ஜீவர்களெனப் பூர்வ பக்கம், சித்தாந்தமோ:— ஈண்டதிதைவாதிகளின் மாட் டுக்கேட்கப் பெறுமந்தர்யாமி பரமான்மாவேயாம். யாங் ஙனமாலோவெனின்? தத்தர்ம வ்யபதேசத்தான் அப் பரமான்மாவின் எச் சர்வாந்தரியாமித்வ ஆத்மத்வ

 

அமிருதத்வாதி சாதாரண தருமங்களுளவோ அவற்றிற் கீண்டு வியபதேச மிருத்தலி னென்பதாம்.

"சர்வ தர்மோப பத்தேஶ்ச்ச" 2-1-37 என்னுஞ் சூத்திரத்தே யெண்டவறுதலும் மாறுபாட்டானென்று ணர்க. இதன்பொருளோ:— யாது நிர்க்குணமோ, அஃது பாதானமன்றும். எங்ஙனம்:—கந்தம் என்னும் நியாயத்தான் நிர்க்குணப் பிரஹ்மத்தினின்றும் சகத் சர்க்கம் புகல்வதாய்ச் சமன்வயம் முரணுகின்றதாவின்று வென வையம் நிகழுஞான்று, முரணுகின்ற தெனப் பூர்வபக்கமாம். சித்தாந்தமோ, சகற்காரணத்வ சர்வஞ்ஞத்வாதிகளாய காரணதன்மங்கள் யாவையுளவோ, அவை யாவற்றிற்கும் முன்மொழிந்த முறைமேய பிரஹ்மத்தின்கண்ணே யேலலின் பிரஹ்மமே சகற்காரண மென்பதாம்; இது பாவமாம்:—யாதுநிர்க்குணமோ அஃதுபாதான மன்றுமென்னும் வியாப்தியில் என்பரிணுமித்வாபாவம் வியாபகமா? அல்லதென் விவர்த்தோபாதானத்வா பாவமா? ஆதியதன்றும், உடன்பாடுண்மையின்; அவிதியமுமன்றும், ஆரோபித நித்தியத்வ உபாதானமாங் காற் சாதியாதியிற் பிறழ்ச்சி யாதலின்; ஆதலின் பிரஹ்மத்திற்கு நிர்க்குணத் தன்மை யுண்மையேனும் விவர்த்தோ பாதானத் தன்மை விருத்தமன்று

மென்பதே. ஆதலினொரு சிறிதேனுஞ் சமன் வயத்திற்கு முரணின்று மெனத் துணியப் பெறும். ஆனந்தாதய: பிரதானஸ்ய'' என்னும் 3 - 3 - 11 ஆஞ் சூத்திரத்தின் பொருள் வருமாறு:—ஈண்டுப் பூர்வ பக்கத்தே ஆனந்தாதி குணுனுப சம்ஹாரத்தான் வாக்கி யார்த்தாநிர்த்தாரணம், சித்தாந்தத்தில் அந் நிர்த்தாரண மெனப் பலபேதமாம். ஈண்டு நிர்க்கு ணப் பிரஹ்மபர சுருதிகளில் ஆனந்த ஸ்வரூபத்வாதி தன்மங்கள் சிற்சிலபாற்கேட்கப் பெறுகின்றனவே; அவையென் யாண்டு முபசங்கரிக்கப் பாலனவா அல்ல தன்றுவென வையம் நிகழுழி, உபசங்கரிக்கப் பாலன வன் றென்பது பூர்வபக்கமாம். சித்தாந்தமோ, பிர தானப் பிரஹ்மத்திற்கு, ஆனந்தாதய: ஆனந்தஸ்வ ரூபத்வாதிய தன்மங்கள் யாண்டு முபசங்கரிக்கப்பாலன வாம், சருவசாகைகளில் வேத்யமாய பிரஹ்மத்திற்கு, ஏகத் தன்மையானே வித்தையி னேகத் தன்மையா னென்பதாம். இன்னவற்று லிவருக்கு யாதுங் கை வாராது நிர்க்குண சமன்வயமே சித்தித்ததென் றுணர்க. உபாசனையின் பொருட்டுக் கற்பனுகுண மொப்பிய சிற் சில விடங்களை உதாகரித்து விடின், யாவருஞ் சங்கர பாஷியத்தைப் பொருட்படுத்தாரென நினைந்தனரோ?

அங்ங னறிவாளரா யாது செய்யாரன்றே? இது விடயத்தே விரிவாய் வரையலா மெனினும் இவரிங்கோர் சூத்திரமும் அங்கோர் சூத்திரமுங் கோர்வையின்றி காண்பித்ததானே அத்துணை மாத்திர மொருசிறிது காண்பித்தேம். இவர் சூத்திரங்களைக் காண்பித்து ஏதோ சில பொருள்களையும் வரைந்தார் அஃதெங்ஙன மேனு மாகுக. தாமெழுதிய அருத்தத்திற்குப் பூர்வ பக்க சித்தாந்தங்களை யேனுங் காண்பித்தனரா? இங்ஙனங் காண்பித்தன் மாத்திரையானே 'யிவர் முற்றினும் விசாரத்தகப்படுத்தியதாக யாவருங்கருதாரென மனமுறவறிக. இன்னுமோர் விந்தை:—"வேதாந்த சூத்திரத்தில் அவைதவாக்கிய சூத்திரங்களே யுள்ளன "அதிகந்துபேத நிர்த்தேசாத்" அதிகர் (ஜீவேஸ்வரர்க்கு) பேதங்கூறப்படலான் என்னுமொரு வேதாந்த சூத்திரத்தை மாத்திரம் உதாகரித் திருக்கின்றேம்" என்றார். ஒரு சூத்திர மாத்திரங் காண்பித்ததென் கொண்டோ? அச்சூத்திரமமைந்த இதரவ்யபதேசாதிகரணத்தைக் காண்பியாத காரணமென்னே! இனியிவர் காட்டிய சூத்திரத்தின் பொருளை யாங்காட்டுதும்:—இச்சூத்திரத்திற்கு முற் சூத்திரத்தே பிரஹ்மஞ் சகற்சனிப்பிக்குமேலாயின் றன்னனிட்டஞ் சனிப்

பியாதென்னுந் தருக்கத்தான் சிவாபின்னம் பிரஹ்மஞ் சகதுபாதானமெனப் புகல்வதாய்ச் சமன்வயம் முரணு கின்றதா வின்றுவென வையம் நிகழுழிப் பூர்வபக்கமாய் "இதரவ்யபதேசாத் ஹிதா கரணுதி தோஷப்ரசக்தி" என்னும் 2-1-21 ஆஞ் சூத்திரங்கிளம்பியது. இதனது பொருளோ:—இதரவ்யபதேசாத், இதரனுக்கு, ஜீவனுக்கு, "தத்துவமசி" யாதியாற் பிரஹ்மத்வ வியபதேசத்தான், இதரத்திற்கு, பிரஹ்மத்திற்கேனும் "இச்சிவ வடிவமா யனுப்பிரவேசித்து" என்பதாதியாற் சாரீரத்வ வியபதேசத்தான், பிரஹ்மத்திற்குச் சிருஷ்ட்ருத்வ மாங்காற் சிவனுக்கே சிருஷ்ட்ருத்வ முண்மையின் ஹிதாகரணுதி தோஷப்பிரசக்தி, நஞ்வ்யத்யாசத்தான் அஹிதஜராமரணுதி வெகுவிதானர்த்தகரண ரூபமோடத்தின் பிரசக்தி பிரஹ்மத்திற்கு:—இதனுனே அதற் கப்ராந்த சேதனத்தன்மையானே அநிஷ்ட சகச் சனகத்வா யோகத்தான் றுதலிய சமன்வயம் முரணுகின்றதென்பதாம். இன்னணம் பூர்வ பக்கமாங்காற் சித்தாந்தம்:—"அதிகந்துபேத நிர்த்தேசாத்"என்னும் 2-1-22 ஆஞ் சூத்திரங்கிளம்பியதெனவுணர்க. இதனது பொருளுமொரு திங்மாத்திரமீண்டு தரிசிப்பிப்பாம். துவென் கிளவிபூர்வ பக்கநீக்கப்பொருட்டு. யாதினுற் சாரீரனி

னின்றும் அதிகம், சர்வஞ்ஞும் சர்வசக்திபிரஹ்மம் சகதுபாதானமும்சிருட்டாவுமெனச்செப்புவேம், அதனுன் ஹிதாகரணுதி தோஷப்பிரசக்தி, யாங்ஙனங் கொலோவெனின், பேதநிர்த்தேசத்தான் "ஆன்மாதுணிபாய் அரேகாணத் தக்கது" என்பதாதியாற் கற்பிதபேதத்தின் வியபதேசத்தான்; நித்திய முக்தமாய பிரஹ்மத்திற்கு ஹிதமேனும் அஹிதமேனும் ஒருசிறிது மொல்லாதாம். எதனுன் ஹிதாகரணுதி தோடம் பற்றுறுமோ. ஆதலிற் கற்பிதபேத மாதரித்தே சருவஞ்திற் கசாங்கர்யோப பத்தி யென்பது தாற்பரியமாம். இச்சூத்திரத்தா னிவருக்குக் கையுற்றதுபோதும்! இனியேனு மித்தகைப் பிரவிருத்தியை விட்டொழிப்பாராக. இவரீந்த துவிதப்பிரமாணமாகாத விச்சூத்திரப் பொருளை முற்சூத்திரப் பூர்வ பக்கத்தோடு காட்டினும். இனியிதன்றெடர்பாயிவ்வதிகரணத்துள்ள வொரு சூத்திரப்பொருளையுஞ் சிறிது இனிது தெரிவான்வரைவாம். "அற்றேலேகரூப பிரஹ்மத்திற்குச் சகற்காரணத்வ மாங்காற் காரிய வைசித்திரியம் ஆகாதென்னுந் தோடத்தைத் திருட்டாந்த வாயிலாய்ப் பரிகரிப்பாம். "அஸ்மாதிவச்ச ததனுபபத்தி" 2-1-23 ஏகப்பிருதிவி சன்னியங்களாய அஸ்மங்கட்கு, வஜ்ர வைடூரியாதி

பேதத்தால் வைசித்திரிய மெங்ஙனமோ அங்ஙனம் பிரஹ்மகாரியங்கட்கு ஸ்வரூப வைசித்திரியமொல்லும். ஆதலின் தததனுபபத்தி: அவ்வறைவுற்ற தோடத்தின் கூடாமையாம். ஆதலினுன், ஜீவாபின்னப்பிரஹ்மவாதி சமன்வயம் முரணுதெனத் துணியப்பெறும். இதற் கயனுற்ற உபசங்கார தரிசனுதி காணத்தின்கண்ணே, பிரஹ்மம், உபாதானமேனுங் கர்த்தாவேனு மின்றும். அசஹாயத்தன்மை யுண்மையின் சம்மதமொப்பவென் னும் நியாயத்தான் அசஹாயத்தாற் பிரஹ்மத்திற்குச் சகற்சருக்கம் சாற்றுவதாய்ச் சமன்வயம் முரணுகின் றதா வின்றுவெனவையம் நிகழ்ந்து, குலால திருட்டாந் தத்தானும் மட்டிருட்டாந்தத்தானும் பூர்வபக்கஞ்செய் யக் கீரம்போலெனச் சித்தாந்திக்கப்பட் டருளிச்சேத னு சஹாயத்வம் வேண்டுமெனக் கடாவியவழி யத்திரு ட்டாந்தத்தால் விடையிறுக்கியருளுவான் மந்திரார்த்த வாத இதிகாச புராணுதிகளில் தேவபிதுரிருடிகளாய சேதனர்கள் தஞ்சித்தியாற்றலாற் பாகிய சாதனமன பேக்ஷித்தே சங்கற்ப மாத்திரத்தானே நாநாவித காரிய கர்த்தாக்களாய்க் காண்கின்றனரன்று? அஃதொப்பப் பிரஹ்மமு மசஹாயமாயே சகதுபாதானமும் கர்த்தா வுமாமெனச் சமன்வய முரணுவதை யருளியதை விரி

வின்றிக்கண்டுகொள்க. இனி "இந்தத் துவிதவாக்கிய சூத்திரங்களுள்ளேனும் உபநிடதங்களினுள்ளேனும் கடாகாச மடாகாசத்தைக்கொணர்ந்து புகுத்திச் சீவேஸ்வரரைக் கற்பிதராக்க வொட்டேம்" என்று வரைந்தார் இதுவு முண்மையறியா மாசென்றே கோடக்கிடந்த தொன்றும்; துவித வாக்கிய சூத்திரங்க ளென்பதை மேலே சாதன பாகமே யெனக்கூறி யுண்மைப் பொரு ளத்வைதமே யெனத் தாபித்திருத்த லானே ஈண்டும் விரிப்பானே னென விடுத்தாம். உபநிடதங்களும் அத்வைத பரமே யாம்; உபக்ரமாதி லிங்கங்களா லதன் கண்ணே பரியவசான முறலின். இஃதன்றிச் சர்வ சாஸ்திரங்கட்கும் அங்கங்கட்கும் வேத பூர்வ பாகங்கட்கும் நிவிருத்தி வாயிலாய் அத்வைதத்தின் கண்ணே தாற்பரியமா மென்பதை ஸ்ரீ மதுசூதன சரசுவதி சுவாமிகளருளிச் செய்த பிரஸ்தான பேதத்தைக் கற்றுத் தெளிதல் கடனும். இனிக் "கடாகாச மடா காசத்தைக் கொணர்ந்து புகுத்திச் சீவேசுவரரைக் கற்பிதராக்க வொட்டேம்" என்றூ ரன்றோ! இஃதுமோர் விபரீ தந்தான். என்னை? கடாகாச மடாகாச திருட்டாந்தத்தால் ஜீவேச கற்பனை யாங்ஙன மேனும்? எனுமேல், கடமட உபாதிகளைத் தணர்த்து நோக்

இற் கடமட உபஹித ஆகாசத்திற் கென்னனி யாமா? விபுவாயிருக்கு மவ்வோர் விண்டானே உபாதி வயத் தா னுவா யிலங்கினும் நாசமுற வியாங்ஙனம்?உபாதி நாசத்தையே உபஹித நாசமெனின் ஒவ்வுமா? எங்கே னும் யாரேனும் கண்டு கேட்ட துண்டா? அல்லது இவருக்குத் தெரியினும் வரைவாராக. உலகத்தின் விவகாரம் பெரும் பான்மையும் உபாதியுற்றே யன்றே விளங்குகின்றது, விளங்கவே, அவ்வவ் வுபாதி களையின் அவ்வவ் வத்துக்கட்கே நாசமா மெனின் யாவரே இரு கை கொட்டி நகையார்! இங்ஙனமாகவே கடாகாச மடா காச திருட்டாந்தம் சுருதி ஸ்மிருதி புராண மாகமம் முதலனவே யன்றி இருடியர் சம்மதமு மாயதென வை யமற விவர் துணிந்து கோடற் பாற்றும். மற்றைய திருட்டாந் தங்கள் ஐக்கிய விடயத்திற் கொடுக்க முய லினும் விரைவிற் கெடுக்க வெதிர் பார்க்கின்றேம்.

இத்துணை விபரீதமும் தீக்ஷிதயோகியர் நூல்களைக் கசடன் றென்று ராயாத கசடதனே யாம். இனியே னுந் தேர்ந்துய்வ தவர் கடன். இவர் முறையே நூல்களி லெல்லாம் புகுத்தி விடின் யாவர் எந்நூலை நம்பிச் சிர வணித் துய்வது? உலகிற்றான் யாங்ஙனம் விவத்தை பொ ருந்தும்? இது விடயத்தை முன்பே யுணர்த்தி யிருந்த

லின் விரித்ததே சாலும். இனியேனுஞ் சங்கரத் துவே ஷத்தை விடுத்துத்தாங்கொண்ட அல்லது தீக்ஷிதயோகி யர் உணர்த்திய நெறியே வரலே நலனும். இன்னுஞ் சிறு காலேயும் நிந்தையின் கண்ணே போக்காது காக்க விரு ம்புகின்றனமேயன்றி இவர் பாற் றுவேடங் கிஞ்சித்துங் கிடையாது. ஆக்ஷேப மிருப்பின் வரைந்து தெரிந்து கொள்ளு வாராக. இத்தனை யிதோபதேசஞ் செய்யும் நீர் கண்டித்தறகுமாலோ வெனின்? தகுமே; நயத் தால் வாராததைப் பின்னென் செய்வது? கண்டித் தா வது தான் நல்வழிக்குக் கொண்டு வர வேண்டும்! ஆத லினு லின்னஞ் சில பன்னுவதையும் நியாய வாயிலாயே கண்டித் தடக்குவான் றொடங்கு வாம். இனிச் "சங்க ரர் பேத சுருதிகளைத் தகர்த்து அபேத மாக்குதற்குக் கொணரும் குடங்களை யுடைத்து விட்டே" மென்றார். சுருதிகள் அபேத தாற்பரியத்தை மனத்தே வைத்துக் கொண்டு அவற்றின் சாதன மாகுமா றுபசனுதியைக் கூறுகின்ற தென்பது இதுகாறுங் காட்டிய தானே தெரிய வருமன்றே! அதனன்ஞாபகத்தின் பொருட் டுச் சூதசம்மிதா வாக்கியத்தையு மீண்டுக் காட்டுதும். அஃதாவது வருமாறு:-"கேட்பவனுடைய சித்தம் பரி பாக மிலாதே கொண்டு, மீட்சியாய் வசமதின்றி வேத

மோரிடத்திலோர் காற், காட்சியதுள்ள கால பாத்தினை யொழிந்து வேறு, மாட்சியி லொன்றுண்டாக வகுத்து ரை செய்த தன்றே. இத்தாவித்தைச் சாதிப்ப தென்ற தீர்த்தமா டென்ற, லொத் தொவ்வாது வேறு படத் தோன்று முலக மென்றுரைத்தல், வைத்தே பாவ புண் ணியமும் வன்னுச் சிரமங்களு மிவற்றோ, டொத்தே நின்றோர் சரிதைகளு முரைக்கும் வேறு முள்ளனவும். சுகமொடு துக்கம் பூதம் பௌதிக மிதுவே யென்றல், சகமுடைத்தாய சத்தம் வேறினின் றகைமை தானு, மகமறி வென்று நின்ற வறிவினில் வேறியாவுந், தகவுள வுண்மை யென்றே சாற்றிடுந் தன்மை தானும். எல் லாம் பொய்யே யென்பதுவு மாயைக் குண்மை யியம்பு வது, மில்லாமாயை யிதனாலே யியலும் பந்தம் வீடு களு, மெல்லா மாகுங் குருமதமு மிவனை யடைவோன் றன் மதமுஞ், சொல்லா ரளப்பில் லாவிச்சை யிருக்கும் படி சொல் லுகை தானும். ஓதுகின்ற நூல் பலவு முரை க்குந் தர்க்க முள்ளனவும், பேதித் துளதா மிகவுமெ னப் பேணிச் சுருங்கச் சொல்லுகையு, மேத மின்றி யித்தனையும் பரத்தில் வேறென் றியம்புவது, நீதியாகு மூளவெவையு நின்றே நிகழ்த்து மாமறை தான். பரமா யுள்ள மறை தானே பாக மானோ ரறிவுக்குத், தாமா

படையும் பரிசாகச் சாற்றியவர்கட்கிதமாகத், திரமா யுள்ள மழுங்கேயுஞ் சிறிதே யெல்லா விரதம்போ, லுர மாய்த் தாமிப் படியென்றே யுபதேசித்த துண்மையி னல். சாதனமாகுஞ் சதுட்ட யங்கள் சமைந்த வத்தன் மை யோர்க்கு, நீதியாக வருமறைதா னின்றே யிவர் களறியும் வணம், பூதமாயும் புவனங்கள் பிறவுமாகி யிருந்ததுவு, மேதமில்லா தொன்றாய பரமே யென்றே யியம்பினதால். சகமொடு சிவனீசன் சார்ந்துள விகார மின்றிச், சுகமுடைச் சத்தாய்ச் சித்தாய்த் துகளின்றி நுண்ணிதாகி, யகமெனு முரைகட் குள்ளா யறிவரி தாகி யொன்றாந், தகவுடைப் பரமந்தன்னி னொருமை யை மறைகள் சாற்றும்.” என்பனவாம் இவ்விடயத்தே இவையேயன்றி யின்னுமளவில் பிரமாணங்களுள; விரிக் கிற் பெருகு மெனுங் கருத்தாற் சுருக்கி வரைந்தாம். ஆதலின் அபேத அபிப்பிராய உபாசன பேதபர சுருதி களை யெவருந் தகர்த்து அபேதமாக்க வேண்டுவதில்லை. அதனுண்மையை எஞ்சங்கர முனிவர் எடுத்துக் காட்டி யருளினரேயன்றி மற்றன்று. அவற்றின் கருத்து முன் பின் அங்கனில்லா திருப்பினன்றோ தகர்க்க வேண்டும்? இயல்பாயே யிருப்பதைத் தகர்ப்பானேன்? இதனுண் மையை அகூயை விடுத்துச் சங்கரபாடிய மாயு மருந்

தவரன்றே அறிவர். ஏனைய ருணர வொண்ணுமா! அங்கொன்று மிங்கொன்று மாய்க் கண்டே யிடர்ப்படுவரென்க. அங்ஙன மிடர்ப்படா வழியே யிந்நூலின் கண்யாம் பொறித்தனம். நன் காராய்ந்துய்க.

இவர் பொன்போற்போற்றும் ஆனந்த லஹரியின் கண் தீக்ஷிதயோகியர் மறைமுடிவுகட்கும் பிரஹ்ம சூத்திரங்கட்கும் மகா தாற்பர்ய மவாந்தர தாற்பர்யமென்றபிப்பிராய விருவகை தரிசிப்பித்து ஆதியது நிர்க்குண சிவத்தின் மாட்டெனவும் மற்றது சகுண சிவத்தின் மாட்டெனவும் கூறிச் சாத்திய சாதனமாய்க்காண்பித் தறிவுறுத்தலை யிவரேன் பாரா தசூயைப்படுகின்றனர். இவர் தலைகீழாய் நின்று தவமாற்றினுஞ் சுருதி முடியாகம புராண இதிகாசாதி சித்த சுத்தாத்வைதத்தை மறுத்தலாகாதென்க. என்னே? அத்தவப் பயனுய்ந் தீயு மெம்மம்மை நாயகன் பித்தனன்றே! தனக்கு யாரே நாசந்தேடுவர்? இன்னு மந்நூலில் இராமாநுஜ மாத்வபாடியங்கள் சுத்தாத்வைத சங்கரபாடிய அனுசாரி யநேககாரணங்களா லன்றென்றும் ஸ்ரீ கண்டாரியர் பாடிய மனேக ஹேதுக்களாற் பகவற்பாதீய பாடிய அனுசாரியென்றும், ஆயினேன் வேறு யாற்ற வேண்டுமெனக் கடாவிச் சாதன சகுணப் பிரஹ்ம நற்

ரூபனத்தின் பொருட்டென்றும் நுதலி யிருப்பதை யிவர் மையயலுருது தைவரற் கென்னையமோ! இவ் விசாரம் ஆண்டு விரிவாயிருத்தலி ளிம்மட்டே காண் பித்தேம்; இனி யாரேக்ஷபித்துவரைவாரேல் வரைவாம்; அற்றேல், நீர் தீக்ஷிதயோகியரைப் பரமாசிரியராய்க் கொள்கின்றீரே அவ்வணங்கொண்டும் ஷ யோகியர் கொள்கைக்கு மாருய் முன்னுதலிய முப்பாவனை யருத் தத்தைக் கொண்டீரே யது நும் பெருந்தகைமைக்குக் கவின்கொலோ வெனின்! சிங்காவலோகன நியாயத் தால்விடை கூறுதும். அங்ஙனம் நீர் கூறிய துண் மையே! யாமோ முதற்பாவனை சகுணவிஷயமெனவும் இரண்டாவது நிதித்தியாசன வடிவ நிர்க்குண பாவனை யெனவும் மூன்றும் பாவனையோ நிருவிகற்ப பிரஹ்மோ பஸ்திதி யெனவுங் கூறினும். அதற்குமாருய் நம்யோகி யர் காரிய விஷ்ணுவை முதலில்வைத்து அதற்குமேற் சத்தியைவைத்து அதற்குமேற் சுத்தாத்வைத பர சிவத்தை வைப்பான், உத்தரோத்தர உற்கிருட்ட மூவித யோகி சந்யாசி விபாகத்தினும் விஷ்ணுசக்தி சிவ பாவனைகட் குத்தரோத்தர முற்கிருட்டப் பான்மை நுதலி யுள்ளார். அன்றியும் சிலகாலம் கார்வண்ண ணுய நாராயணனை உபாசனைசெய்த இந்திரத்யும்ன

னுக்கு அதன்பின் அக்ஷர சப்தப் பிரதிபாத்திய சக்தி யுபாசனை வாயிலாய்ப்பரமேஸ்வரோபாசனையானே அத்விதீயப் பிரஹ்ம சாக்ஷாத்கார உபயோகியாய அந்நிதித்யாசன அனுஷ்டானம் புகலப்பெற்றதன்றே நந்தீக்ஷித யோகியரால் அதனைச்சற்றுராய்வாம். சற்றேபொறும். சூசிக்கடாக நியாயத்தாலோர் அற்பக் கடாகடாவுகின்றேன். விடை யிறுக்கிவிட்டுப் பிரகிருதத்திற் செல்லலாமெனின்? மிகமகிழ்வுற்றே மக்கடா யாதுகொலோவெனின்? விஷ்ணுவை யிருபிரிவு செய்ததாய் மேற்கூறியவற்றுற் காணப்படுகின்றதே யதுதா னியாதெனின்? ஆனந்த லஹரியின் முற்பால் சர்வஞ்ஞராய மகரிஷிகளால் ஆற்றிய ஸ்ரீ மகாபாரதாதிகளில் துணியப்பெறும் பரப்பிரஹ்மத் தன்மையரும் சற்புருடர் யாவரானும் விபாகமின்றிப் பரப்பிரஹ்மமெனப் பூஜிதருமாய ஸ்ரீ நாராயணருக்கு ஏதோ ஒரு கோணத்துடநிவிஷ்டமாய மந்திரார்த்தவாதபுராணவசனாதி லேசமவலம்பித்து ஜீவபாவம் பகர்வான் நந்நாவெழும்பவில்லை. அன்னணமேற் சிரம் நூறுசுக்கலா யன்றேபோம்; வேதவைதிக த்ரோகமும் தேவதா துரோகமும் உண்டாம். ஆதலின் நாராயணர் பரப்பிரஹ்ம கோடியரென்றே யெம்மனோர் துணிபாம். எனக்கூறி

இடையே அநேக கடாக்களைக் கடாவி விடையிறுக்கிக் காரியர் மூவரும் காரணப்பிரஹ்மப் பிதாவாற் கற்பிக்கப்பட்டு முத்தொழில்ராநுரென்றும் பின் மாற்சரியத்தாற் றவமாற்றித் தம்பிதாவைமகிழ்வித்து ஒருவரை ஒருவர் சிருட்டித்துயர்ந்தாரென்றும் பகவான் வாயு கூறியதாய் இடையே நுதலி "அவ்வக் கற்பாந்த விருத்தாந்தத்தை யனுசரித்து மகரிஷிகளா லவையவை நுதலப்பட்டன; வித்வா னதன்கண் மோகமுற லாகாது" இதுபர மிது பரமென்பதின்றென் றபிநிவேசஞ் செய்பவர் ராக்ஷதரும் பிசாசருமாவரென்பதி லையமின்றும் எனப் பிரமாணித்து சிவனுக் கிருவடிவம் வாயு சம்மிதை சூதசம்மிதையாதியி லோதலாமெனப் பிரசங்கத்தாற் கூறி இவ்விஷய சந்தர்ப்பத்தே யநேகவிஷயங்களை யெடுத்து விரித்துப் பிற்பால் விஷ்ணுவிற்குப் பிரஹ்ம கோடித்வ முடன்பா டேலாயினக்காற் முற்பாலுதாகிருத ஜீவத்வ கமகங்கட் கென்கதியென்னு மவாவில் ஜகதுபாதான அனுபதான பேதத்தால் பா வபரரென விருவருளரெனக் கழறி "பிருஹத் விஷ்ணுவைப் பணிகின்றேம்".

"பிருஹத் விஷ்ணுவுக்கு நமஸ்கார" மென்னும் மந்திரங்களில் பிருஹத்வ விசேஷணமும் பிருஹத் அப்

ருஹத் தன்மையானே விஷ்ணுவி னிருவிதத்தின் பிர
மாணமெனக் காண்க வெனவழங்கி வராஹபுராணம்
31 அத்தியாயத்தே விஷ்ணுவினிருமை பிரதிபாதிக
மாம். பரவிஷ்ணு சிருட்டித் தளித்தழிப்பானெண்ணிப்
பண்ணிப் பிரவேசித்து விஷ்ணுப்பெயரீந்துகதைகட்க
சக்ராதியாவற்றையு மொவ்வோர் காரணம்பற்றி யீந்
ததை யாண்டே காண்பதன்றி நவமாத் யாயத்தினுங்
காண்க.வித்தர பயத்தால் விரியாது ஒரு சிறிதே காண்
பித்தேம். பிரகிருதத்திற் செல்வாம். தீக்ஷிதயோகியர்
அக்ஷரமென்பதற் கொருவாறுபொருட்படுத்திச் சக்தி
யாக்கிப் பொருள் கோடினு மதுவு மெமக்குப் பரம
வுடன்பாடேயாம். ஆயினு மக் கூர்மபுராணத்தை முன்
பின் னாராய்வுழி யக்ஷர சப்தத்திற்கு நிர்க்குணப்
பொருளே படுதலினானும் அக்ஷராதிகரணத்தின்
மாட்டும் பாடியத்தில் அக்ஷரசப்தம் பிரஹ்மமெனத்
தாபித்திருத்தலினானும் இவரும் தீக்ஷிதயோகியர்
வரைந்ததை யோர்ந்தோ வோராமலோ நிர்க்குணப்
பிரம்ம உபாசனையென்றே பொருள் கொண்டமையா
னும் அக்ஷர சப்தத்திற்குஞ் சம்சாரகாலத்தே மாத்
திரம் சக்திப்பொருள் படுதலினானும் உபாசனையின்
பொருட்டு அர்த்தவாதமாயுங் கூறலொல்லுகின்றமையா

னும் சாதன சாத்திய பாகங்கட்கு முற்கூறியதே பொருத்த மாதலினானும் யோகியர் முறையேபிராம்மி பாவனை நிதித்யாசன மாயினும் இவர் பேசும் வைதிக பாசுபத சகுண யோகத்திற்குப் பயனென்றுங் கோடக்கிடையாமையானும் இவருக்குமது சம்மதமன்றென விவர்வரைவாலறியப் பெறுகின்றமையானும் யோகியர்க்குமாறுயிவர் ரிபுகீதை முதலன பிரமாணித்தமையானும் யோகியர் முறையாயும் "சிவனேயுள்ளான் பிறிதில்லையென்று திரமாயறிவதுவே" யென்பது இரண்டாவதாய சத்திபாவனை யத்தியந்தமாகாமையானும் இவர் கட்சிக்கீக யங்ஙனங் கோடின் அழிவு எய்துகின்றமையானும் இன்னுமநேக பிரபல யூகங்களானும் பாதகமின்றென்றுணர்ந்துகொள்க. பிரபலயூகமென்றது பிராம்மி பாவனையை நிதித்தியாசன மாகக்கோடின் நிர்விகற்பப் பிரஹ்மோ பஸ்திதியாயசாக்ஷாத்காரசாதனம் வேறொன்று மிகைபடக்கற்பிக்கவேண்டும்; வேண்டவே, பிராம்மிபாவனையால் ஏகம்பார்ப்பது கூடாமற்போமென்னு மின்னோரன்ன பலவென்க. இரத்தினத்திரய பரீக்ஷயி விதைப்பற்றிய கடாக்கணிகழ்ந்து வரையின் மறுப்பாம். இத்துணையும் விவேகமுடையார் அத்வைத சங்கரத்வேஷம் விடுத்து ஊகித்து நடுநிலைநாட்டி நன்மைபெறவே வரைந்தாமன்றி யொன்றைக் கருதியன்றாம்.

இனி "அக்கடாகாயங்களை அந்தச் சர்வசார முதலிய மாயாவாதோப நிடத எல்லைக்குள்ளே வைத்துப் போலிமோக்ஷ இச்சை உடையார்க்கு விளையாட்டுக் காட்டுவாராக" என்றார்.

அக்கடாகாயாதி நிதரிசனங்கள் சர்வ சாராதியோடு நில்லாது புராணாதி பரியந்தம் வியாபித்து விட்டதே நம்மால் நிறுத்தக்கூடியதன்றே; இவரேனும் இருடியர்க்கோர் விண்ணப்பம் வரைந்து எடுத்துவிடும்படி செய்வாராக. அல்லது தமது அச்சிலந்நூல்யாவற்றையுந் திருத்தி அச்சிட்டு விடுவதே நலமாம். போலிமோக்ஷ விச்சையுடையார்க் கென்று ரன்றோ! இவரேயன்றி நம்மனோரன்றும். என்னை? மோக்ஷசாதன பூதமாய சதுர்த்தச வித்தைகளையும் மாயாவாத மாக்கலினனும் சாதனபாகத்தையே விழைந்து சாத்தியத்தைக் கைவிடுவதானும் சகுணத்தின் சாதனம் நிர்க்குணமென முன் பின் முரணுற மொழிதலானும் ஸ்ரீமஹாதேவ அனுக்ரக லீலாவிக்ரகத்தைச் சந்ததம் நிந்தித்தலானும் பிரிவுறுஞ் சிவசையோகத்தையே முத்தியென மருளலானும் அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் சிவமாக்கி யெனையாண்ட என்பன முதலிய திவ்விய திராவிட சூக்திகட்குப்பொருண்மருண்

டுண்மைபொருட் கோடக்கூடாமையை யுடைமையா னும் அவர் கொண்டபொருளை ஆயுளளவுந் தாபிப்பான் றவம்புரியினும் ஒல்லாமையானும் உண்மையாய சுத் தாத்வைத சிவப்பிராப்தியை நால்வாருளியிருப்ப அவ ற்றையாயு மாற்றலின்மையானும் அக்கருணை மூர்த்திக ளருளிய திவ்ய சூக்திகளாயும் பெரும் புண்ணிய மின் மையானும் அன்னோர் நெறியறியாமல் சாதுக்களை நிந் தித்தலினானும் அந்நால்வரு ளொருவராய ஸ்ரீ திரு ஞானசம்பந்த மூர்த்திகள் திருவருட் பாங்கிற்குரிய திருச்சீடராய சிவஞ்ஞானவள்ளலருளிய

"ஒன்று யுலகனைத்து மானுயென் றப்பமுனி
பொன்று மொழியாற் புகன்றிருப்ப—குன்றுத
முத்தியினு மும்முதலு முண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு.

ஓசை யொலியெல்லா மானாய்நீ யென்றபினர்ப்
பேசவிரண் டுண்டோ பேய்ச்சைவா—ஆசையெலாம்
அற்றவிட முத்திநிலை யோஅஃ தெல்லாம்
உற்றவிட முத்திநிலை யோ.

ஈசன் வேறி யான் வேறென் றெண்ணுகின்ற பா தகரை நீசரெனக் கண்டு நினை யென்றுன்-ஆசை யொ

டும் வேதமுடி வறிந்த வேதியரைக் கூடென்றான் பேத நிலை யெல்லாம் பிரி யென்றான்.

மெய்யைப் பொய்யென்றான் வெளியை நல்ல வீடென்றான், சைவத்துரை காழிச் சம்பந்தன்-ஐயமற, நின்போதம் போமிடத்தே நீயே சிவ மென்றான், என் போதத்துள்ளே யிருந்து. உற்றுணரினீயே யுயர் பிரம மென்பதுவும் மற்ற சிவன்றானுய் வகுப்பதுவும், முற்றும் இறந்த விடத்திரண்டு மேகமே யென்றான் சிறந்த சீகாழி வருதே. என்னும் திருப்பாசுரங்களை யாயும் பெரும்பாக்கிய மின்மையானும்.

"பாசபத்தமே ஜீவாபாச முத்தமே சதாசிவா சிவ ஜ்ஜீவோ ஜீவோ சிவ சற்ஜீவோ கேவல சிவா, திஷ்டே பூர்வம் ஆத்மா ஏகமேவா சரீர பின்னம் பரமாத்மனே கம் சர்வ சாக்ஷி சிவோகம், பிரத்ய காத்ம சிவோகம்." என்பன வாதிய ஆகம வாக்கியங்களாயும் பெரும் பாக்கிய மின்மை யினானும். இன்னு மளவிறந்த காரணங்களானு மென்க.

இத்தகைய போலி மோக்ஷ விச்சை யுடைய விவர்க் கிவர் கூற்றுப்படி விளையாட்டாய்த் தானு யிருக்கும், எங்கள் புங்க வராய சங்கர குரவரும் விளையாட்

டுக் காட்டுவர் தாமாவர், தம் புத்திக்கெட்டாத வித்தை யாதலினென்க. உண்மை முமுக்ஷுத்வ மிருப்பினன்றே நன்மைபயக்கும், நமது வைதிககருமானுட்டானங்கள் அவைதிகர்க்கு வேடிக்கை போலில்லையா! அஃதொக்க விவரும் நினைந்தனர். அம்ம அம்ம நூல்புணரும் பிறப்பிற் பிறந்தும் நூலாயும் நுண்ணறிவிருந்து மிங்ஙன மிவர்மதி சென்றதை நோக்க வெமக்குப் பரிதாபமாயிருத்த லிற்றான் இத்திற உபதேச மொழிகள் அடிக்கடி வரைய நேருகின்றது. இனியேனுங் கண்டுய்வாராக.

இனி "நதஸ்யப்ராணு உத்க்ராமந்தி (பிருக தாரணியம் 6-4-6) இற் காணப்படு மிச்சுருதி யானது, நதஸ்மாத் ப்ராணு உத்க்ராமந்தி "அவனை விடுத்துப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்று மத்தியந்தின சாகை யுடையார் உணர்த்தியவாறு பொருட்படுத்தப் படுமாதலினால், வித்துவான் விஷயமாகாது அவித்துவான் விஷயமேகூறப்பட்டபிருகதாரணியத்து 5-2-11 இற் அத்ரைவ சமவநீயந்தே என்று காணப்படுஞ் சுருதியைச் சங்கரர் அத்ரைவசமவலீயந்தே என்று தமது 4-2-13 ஆஞ்சூத்திர பாஷ்பத்தில் மாற்றிவைத்தமை முழுதுந்தவறு" என்று வியப்பவழு உச்சொற்புணர்த்தினர் நம் விவேகியராய விவர்.

சற்று சாவதானமா யாராய்வாம். நதஸ்யப்ராணு உத்க்ராமந்தி என்னு மந்திரம் விவர் வரைந்த முறை 6-4-6. இற்றவ முயலினுங்கிடையாது மற்ரூ 4-4-6 இற் காணப் பெறுகின்றமையின். இதனை யச்சுப்பிழை யென்று யாமும் ஒப்புகின்றனம். அவனது பிராணன் (தஸ்யப்ராணு) என்பதை ஒப்பேன். அவனை விடுத்துப் பிராணன் (தஸ்மாத்ப்ராணு) என்று மத்தியந்தினசா கையுடையார் உணர்த்தியவாறு பொருட்படுத்தப்படு மென்ருரே! எந்த விடத்தில் எந்த சந்தர்ப்பத்திலென்று காண்பித்தாரா! காண்பித்தால் குட்டு வெளியாய் விடுமென்ரு காட்டவில்லை. அவனை விடுத்துப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை யென்ருரே எப்போது? எங்கே? ஏன்? முத்தித்தசையிலா? இவ்வுலகிலா? மோக்கமடைவானே? அங்ஙனமோக்கமடைவான் கிளம்பாமல் ஈண்டவனை விடுத்துப் பிராணன் செல்கின்றதில்லை யென்று இவர் ஒப்பில் அவன் பிராணனேடு எஞ்ஞான்றள விருப்பன், அவன் விபுவாதலினங்ஙனமேல்அவன் முத்தியடைந்தது யாங்ஙனம்? பிராணனேடென்னின் சரீரமுண்டா? இன்ரு? இன்றென்னில்! பிராணுடியோடவனிருப்ப தியாங்ஙனம்? சூக்குமமாயென்னின்? இருப்பதின் பயனென்? ஆனந்தானுபவத்தின் பொருட்

டென்னின் சிவ னெங்கிருப்பது ? இவ னெங்கிருந் தானந்தம் புசிப்பது? கலந்தென்னில்? கலந்தது யாது தான் பிரியாது? அதற்கு யாதுதான் றிருட்டாந்தம்? எதற்குச் சையோகமோ அதற்கேன் விபாகமுறுது? சையோகமும் அவ்யாப்யவிருத்தியாதலின் அதுவும்சாவயவமின்றி யெய்தாதாதலின் சிவசீவரை யங்ஙனமொப்பின் அழிவெய்தித் தமக்கே நாத்திகமன்றே வரும். அற்றன்று; எம்மதத்தே சீவன் விபுவாதலின் 'அவனை விட்டுப் பிராண னியாண்டேகுமதுபற்றி யுரைத்தேமெனின்? நன்று நவின்றீர்! 4-4-6 ஆஞ் சுருதி யப் பிரசங்கத்தைப்பற்றியதென ஏவரேனுங்கூறுவாரா? பிரசங்கமின்றி மாறுபாடு செய்யலாமா? மறையாயிற்றே தோடம் வாராதா? இத்துணையேன் நுதலுகின்றீர்? நும்பிரசங்கப்படி தான் பொருள் யாது கொலோவெனின் ? தெற்றெனப் புலப்படுத்துவாம். " அதாகாமயமானோ-யோகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ நதஸ்யப்ராணு உத்க்ராமந்தி ப்ரஹ்மைவசன் ப்ரஹ்மாப்யேதி." 4-4-6 பிரு, இதுதா னது அறிஞர்களே இதுவே சுருதியாம். இதன்கட் பக்ஷபாதமின்றி யோரவேண்டும். அன்றாயின், சிவத்ரோகமடையாமல் விடாது. நூற்பிரமாணவழியைவிடா திருமின்! திருத்திவிட்டார் திருத்தி

விட்டார் என்னும்மயலே யடையாதிருமின்! அங்ஙனம் மயலே யடையின் எந்நூல்களினும் விவத்தையின்றிச் " சம்சயாத்மாவி நஸ்யதி " (ஐயமுடையானழியும்) என்னும் பகவத்வசனப்படியேயாமன்றிக்கைவரும் பய னென்று மின்றென்றே கருதுமின்! கருதுமின்! வற் புறுத்திக்கூறல் கருணையாலே யன்றி யுங்கள்பாற் பெ றும்பய னென்றின்றுமென வுணர்மின்! யாங்கள் மய லின்றிப் பக்ஷபாத மின்றியாய்கின்றோம். அம்மந்திரத் தின் பொருளைப் புகலுதிரேனிற் புகல்வாம். அங்ஙன மன்றோ:—பலாசக்தனுக்கே கதியானது கூறப்பெறும், அகாமனுக்கோ கிரியையொல்லாமையின் அகாமயமா னன் முற்றினும் விடுபடுவன்; யாங்ஙனமற்ற காமயமா னனுவனெனின்! யாவனகாமனுவனே அவனகாமயமா னனுவன்;யாங்ஙனமகாமனைத யெனி னுதலுதும்;யாவன் நிட்காமன் எவன் பானின்றுஞ் சென்றொழிந்தன காம ங்கள் அவனிந்நிட்காமனும். யாங்ஙனம் காமங்கள் செ ன்றொழிகின்றனவெனின்? யாவனுப்த காமனுவனோ அடையப்பெற்றன காமங்கள் யாவனுல் அவனுப்த கா மனும். யாங்ஙனமடையப் பெறுகின்றன காமங்களெ னின்! ஆத்ம காமத்தன்மையானே யாவனுக்கான்மா வேயன்றி வேறு காமயிக்கத்தக்க வஸ்த்வந்தரபூதம்

பதார்த்தமின்றும், ஆன்மாவே யநந்தரம் அபாகியம் கிருத்சனம் பிரஞ்ஞானகனம் ஏகரசம் ஊர்த்துவத்தின்று திரியக்கிலின்று கீழிலின்று ஆன்மனினையற் காமயிக்கத்தக்க வஸ்த்து வந்தரமென்க. யாவனுக்கு யாவும் ஆன்மாவேயாமோ அவன் எதனாலெதனைக் காண்பன் கேட்பன் கோலுவன் அலது தொடர்வன் உணர்வன் அல்லதிங்ஙனுணர்ந்தானெதனை யவாவுவன்? பதார்த்தமபற்றன்மையானே அறியப்படினன்றே காமயிக்கத்தக்கதாம். ஆப்தகாமனுப ப்ரஹ்ம வித்திற் கபலாயிது வின்றன்றே! யாவனாத்மகாமனுய் ஆப்தகாமனே அவனே நிட்காமனகாமன காமயமானனுமென விடுபடுவன்; யாவனுக்கான்மாவே சர்வமுமாமோ அவனுக் கனான்மாகாமயிக்கத்தக்க தன்றும். அனான்மாவுமன்னியங் காமயிக்கத்தக்கதாம்; சர்வமுமான்மாவேயாகுக வென்பது விப்பிரதிஷித்தமாம். சருவான்மதரிசிகட்குக் காமயிக்கத்தக்க தின்மையின் கர்மானுபபத்தியென்க. அவ்வகாமயமானனுடைய கர்ம மின்மையினானே கமனகாரணபாவத்தான், பிராணன்களே வாக்காதிகளே உற்கிரமியாவாம். தேகத்தினின்றும் மேற்கிளம்பாவாம். ஈண்டே பிரஹ்மமேயாய்ப் பிரஹ்மத்தையடைவன் என்பதாம். முன் பின் நோக்குழி நிரா

சையனுய்ப் பரிபூரண சிவமாய தன்னை யுணர்ந்தானு க்கு ஈண்டே விதேக கைவல்லிய மென்றன்றோ புலப் படுகின்றது. ஆசையற்றானுக்கு எங்கேசென் றெனு கவேண்டியது. சிவலோகாதியோவெனின்! ஆங்குள்ள ஐஶ்வர்யங்களும் வேண்டானே லங்குதான் போ யியா தியற்றற்பாலது. அதுபற்றியன்றோ "நிரன்வய உபா சகானுமிஹைவமுக்தி" (நிர்க்குணஉபாசகர்கட்கிண்டே பிரஹ்ம சாக்ஷாற்காரத்தான் முத்தி) என ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் தமதருமைப்பாடியத்திலருளிச் செய்தார். இதனானே, " நிரன்வயோபாசகர்கள் (நிர்க்குணோபாச கர்கள்) இங்கே லயம் அடையற்பாலரெனல் ஒவ்வாது. ஏகான்மவாதிகள் பிரதானத்தைக் கடந்துள்ள புருஷ தத்துவசித்தர் என அறியப்படுகின்றனர்" எனத் தீட் டிய தப்புப்பொருள் துண்டந்துண்டமாய்க் கண்டிக்கப் பட்டவாறு அறிஞர் கண்டுகொள்ளுத லெளிதாம்; ஆயி ன்ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் துவைதியன்றோ! அவரேன் இதனை வரையவேண்டுமெனின்! நுதலுதும். அவர் தம க்கும் தாற்பரியம், மகாதாற்பரியம் அவாந்தரதாற்பரிய மென விரண்டாமெனவும் முதலது நிர்க்குண சுத்தாத் வைதசிவத்திலெனவும் மற்ற ததன் சாதனவடிவ சகு ணமெனவும் முன்னரே கூறியுள்ளேம். அம்மகாதாற்

பரியம் நீர்கண்ட முறை யாங்ஙனங்கொலோவெனின் ? இன்னணம்:—" தத்துவமசி யென்பதாதியால் என்னு மிதன்பின், நிரவதிக பரமானந்தமய நிஷ்களங்க சிவ த்வப்ராப்திர்ஹிமுக்தி" எல்லையில்லாத அதாவது பூர ண பரமானந்தமய அதாவது பரமானந்தவடிவ நிஷ்க ளங்க அதாவது பரிசுத்தமாய சிவத்வ வடைவே மோ க்ஷமென்பதாம். எனவே பரிசுத்த பரிபூரண சர்வானர் த்த நிவிர்த்தியும் பரமானந்தப் பிராப்தியுமே முத்தியா மென்க. சிவமாயிருந்தாலன்றிச் சிவப்பான்மையுறலமை வுறுதென்ப தகண்டிதமாய பொருளாம். "சிவத்வப்ரா ப்திராத்மன: பசுத்வ நிவ்ருத்தி மந்தரேண நபவதி" சிவத்தன்மையி னடைவும் சீவனுக்குப் பசுத்வ நூக்க மின்றி யெய்தாதாம். ஈண்டான்ம சப்தம் சீவன்றன் பொருட்டு "ஆன்மாவினின்று மாகாசமுண்டாயிற்றெ" ன்புழியோ பிரஹ்மவாசகமெனவுணர்ந்து கொள்க. பசு த்தன்மையின் நீக்கங்கூறப்பெற்றதே யன்றிப் பசு நீக்க மன்றென்றுணர்ந்து கொள்க. "பசுத்வ நிவ்ருத்திஶ்ச சநதத் பாவனும் வினு" பசுத்தன்மையின் நீக்கமும் அச்சிவபாவனை யன்றியெய்தா; சுத்த வாதனை வந்தே மலினவாதனைமாயவேண்டியிருத்தலின் " அதோநிரந்த ரம் சிவோஹமிதி பாவனுப்ரவாஹேண சிதிலிதபாச

தயா அபகத பசுபாவ: உபாசக: சிவ ஏவபவதி" ஆத லின் அனவரதம் சிவோகமென்னும் பாவனுப்பிரவாஹ த்தால் அழிக்கப்பெற்ற பாசமுற்றுனுய் அதாவது பாச மழிபட்டவனுய்ப் பசுத்தன்மை நீங்கினேனுய் உபாச கன் சிவனேயாவன். சிவனுயிருந்தாலன்றிச் சிவனுதல் பெறப்படாதாம்; ஒன்றுமற்றென்றுதல் ஏலாதாம்; செம் புபொன்னேவெனின் ? பொன்னுதலே யின்றும்; என் னை? ரசவீரிய விபாகப் பரமாணுக்களும் செம்பின் பர மாணுக்களும் விரவலேயன்றி வேறன்றும். அதைப்பிரி க்கும் மற்ரோர் மூலிகையை அச்செய்வாரே யிடின் உடனே பிரியும்; சையோகமாதல் பிரிதல் திண்ணமாம். அன்றி யச்சையோகம் அவ்யாப்யவிருத்தியாம். அதா வது தனததிகரணத்தே தனதபாவத்தை யுடைத்தா யிருப்பதாம். அங்ஙனமாகவே அது சாவயவத்திற்கன்றி நிரவயவங்கட்கொல்லாதாம். ஒல்லாதாகவே சையோக மென்றலே பிழையாம். சமவாயமோ குணகுணிசாதி வியக்தியாதி யன்றி யேலாதாம். அன்றியும் சையோக மாம் வத்துக்கள் ஒன்றுபட்டு இரண்டின்றி யிலங்கினு மயிக்கமுருவாம். பாலும் நீருங் கலந்துழி பாற்போற் ருேற்றினும் பாற்பரமாணுக்களும்நீர்ப்பரமாணுக்களும் விரவியே நிற்கும். ஒரு பரமாணுவோடு ஒரு பரமாணு

ஐக்கியமேயுருது. அதன்கண் சிறிது லவணங்கலப்பின் வேறுபாடெய்தக்காண்டலின். கம்மியன் பாலீந்த சொன்ன நகைக்கண் வெள்ளியைக்கலந்தீயின் நமக்குச் சொன்னம்போ னிகழினும் மற்றோர் கம்மியன் பாலீந்து பரீக்ஷித்துழி இராவாதலின். இவையும் சாவயவங்கட்கேயாமென் றுணர்க. நிரவயவ சிவசீவர்க்கோ ஒருகாலும்சையோகசமவாயாதிகளினவகாசமேயின்று மென்றுணர்க. ஆதலின் சிவனுயிருந்தாலன்றிச் சிவனுதல் பெறப்படாதென்பது துணியப்பெறும். பாசமழிதலும் பசுத்தன்மை நீங்கலும் அநிர்வசனமாயிருந்தாலன்றி யேலாதாம். பாசஞ் சத்தாயிருப்பின் அழிப்பதருமையானும் அசத்தாயிருப்பினே அழிப்பான் முயல்வு பயினில் கூற்றுதலினுனும் சதசத்தாயினே முரணுதலினுனும் அதன் விலக்ஷணமாய அநிர்வசனீயமெனவே கோடல் உரித்தாம். உரித்தாகவே அதனுலெய்திய பசுத்வமுமாம். அங்ஙனமேயா மென்பதி லையமின்றும். ஐயமேல் வரைந்து தெரிந்து கொள்க. அப்பாச மடங்கியிருத்தன் முதலியனவோ அளவிறந்த தோடக்கிரஸ்தமாமெனமறுக்க ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் அபிப்பிராயம் அறிஞர்பொருட்டு விரித்தது சாலும். பிரகிருதத்திற் செல்வாம். நீலகண்ட பாடியத்தும் கைலாயப்பிராப்தி

யறைந்துளதே யெனின்போகமோக்கமென்னு மிருவித ஆசையனுக்கே யென்க. இப்பொருள் விரிவாய்த் தீக்ஷித யோகிய ரானந்த லஹரியிற் காண்க. நீர் அவனுடைய பிராணன்கள் கிளம்பா என்றீர்; யாமோ அவனை விடுத் துக் கிளம்பாவென்றேம். யாது வேறு பாடோவெனின்? வேறு பாடு கண்டு பிழையென வியம்பலாயதா? காணும லா? ஆதியதேல் மாத்தியந்தின சாகையா ருரைத்தபடி உதாரணத்துடன் அவ்விடத்தையும்இனிதுதெரிவித்தல் கடனும்; இறுதியதேல் காணுமல் திருத்திவிட்டாரென் று சொல்வானேன். சொல்ல மாத்திரம் மனந்துணிந்து யதைவிரித்துக்காட்டமனந்துணியாதகாரணமென்னே? மாட்டிக்கொள்ளக்கூடாதென்றே? அங்ஙனமேற் பேனு வை நாட்டலாமா? இது விஷயத்தில் எவ்வளவைய முளதேனும் வரையின் கிருபையால் விடைவரைவான் எதிர் பார்க்கின்றனம். தன் மறுதலையோடுமாத்திரம் வாதாடியிருப்பினே னித்துன்பம்; என் மறுதலை எங் குலத்தவரையிகழ்ந்த தாற்சங்கரரை யிகழ்ந்தேனெனின் அல்லதெம தாதிசைவ குலத்தை யிகழ்ந்ததாற் சங்கர ரை யிகழ்ந்தேனெனின்? அற்றேல், மறுதலை குலத்தா ரையன்றேவிகழவேண்டும்? யாவர்க்கும் பொதுவாசிரிய ரையும் அவர் தம்நூலையுமேன் இகழ்ந்ததோ? ஆதிசைவ

சிகாமணி கட்குப் பிதாவே குருவாதலின் பிதுர்க்களை நிந்திப்பக் குருநிந்தையுமாயதால் பதிற்சங்காகுருவைக் கூடமாட்டினேனெனின்; அற்றாயினும், மறுதலை பிதுர்க்களை காயத்திரியாதியனுக்கிரகித்தலாற் குருவாயிருத்தலின் பிதுர் நிந்தையானே பதில் சமானமாகப் பொதுவாய் உலகிற்கு ஞானுசிரியரையும் அவர் தம் நூலையும் நிந்தித்தது அவர்க்கெவ்விதத்தும் அடாது! அடாது! அன்றியும் மறுதலைமாட்டியது போல் பொதுவாய் மாட்டாது தனிப்பெயர் தொடுத்து மாட்டியது இராஜதந்திரத்திற்கு முற்றினும் விரோதமென்றவர் அறியாதது விசனீகரிக்கத்தக்கதேயாம். இதற்கு மறுப்பிறுக்கவெண்ணமுளதாகின் நிந்தை விடுத்து சாஸ்திரார்த்தமாத்திரம் வரையவேண்டும். ஒருவர்க்கொருவர் விரோதத்தாலென்பயன். சாஸ்திர விசாரம் ஒழுங்காயாற்றின் ஐயமுடையார்க் கையம் விண்டு நன்மைபயக்குமென் பதையவருணர்ந்திருப்பினும் அறிவுறுத்தினமென்க. இனிப் பிரகிருதத்தேசெல்வாம். அவர்பஞ்சமிப்பாடம், ஷஷ்டிப் பாடத்தை கண்டிக்கப்பெருதவாறுதிரமாம். எவ்வெவ் விடங்களின் மாட்டுள்ள புத்தகங்களுடும் ஷஷ்டிப் பாடமே காண்டலினுனும் அப்பிரகரணத்திற் கதுவேயொவ்வலினுனும் பாடபேதத்திற்குத் தக்க ஆதாரமும்

பொருட்பேதமுங் காண்பியாமையானுமென்க. அவர் அதனையினிது காண்பியாவிடினு மவர் கூற்றைக் கூறுக்குவான் யாம் வரைவாம்.

அஃதாவது:—நதஸ்ய என்பது முதல் முழுதுந்தவறென்பதிருய பூர்வபக்கந்துளாவான் இதனை யுய்த்துணர்ந்து கொள்க. இவர் 4-4-6 க்குப்பதில்,6-4-6 என்பதைப்புகட்டிய அச்சுக்குற்றம் சமித்ததுபோல்3-2-11க்குப்பதில் 5-2-11 என்பதையும் பொறுத்தாம்; என்ன எண்ணத்தோடு திட்டியிருப்பினும் பொறுத்தாம். இதுநிற்க, பிரஹ்மசூத்திரம் 4 வ தத்தியாயம் இரண்டாவது பாதம் 6-வது அதிகாணம் பிரதிஷேதாதிகரணமாம். அதன்கட்டான் அவர்பூர்வபக்கம்கண்டிக்கப்பட்டுளது. அதனையாவரும் எளிதிலுணருமா றுணர்த்துகின்றனம்.'பிரதிஷேதாதி திசேந்நசாரீராத்" என்னும் 4-2-12 ஆஞ் சூத்திரம் அவ்வதிகரணத்தே பூர்வபக்ஷமாம். அங்ஙனமன்றே:—ஈண்டு பூர்வபக்கத்தே நிர்க்குணப் பிரஹ்மவித்திற்கும் பிரஹ்மலோகப்பிராப்தி, சித்தாந்தத்திலோ ஈண்டே முக்தியாம்;நிர்க்குணப்பிரஹ்மவித் தீண்டு விஷயமாம்; என்னவனுக்கு உற்கிராந்தியுண்டா இன்று என வையம் நிகழுழி, உண்டுற்கிராந்தி; அற்றேலின் யுற்கிராந்தி அவனது பிராணன்கள் கிளம்பா" என நிர்க்

குண ப்ரஹ்மவித்திற்குச்சரீரத்தினின்றும் பிராணோற்கிராந்திப்பிரதிஷேதத்தான் எனின்; அற்றன்று,சாரீரனாய சிவனினின்றும் இவ்வுற்கிராந்திப் பிரதிஷேதமாம்,சரீரத்தினின்று மன்றும்; "அதனினின்றும் பிராணன்கள் கிளம்பா" என மாத்யந்தின சாகையில் ஜீவனினின்றே பிராணோற்கிராந்திப் பிரதிஷேதத்தின் செயற்கையான் .அதாவது பஞ்சமிப்பிரயோகத்தால் ஆறும் வேற்றுமைப் பிரயோகத்தான், அதனின் என்னும் பிராதான்யத்தான். ஆதலின் பிராணாதி சஹிதசிவனாய பரப்பிரஹ்மவித்திற்கும் உண்டுற்கிராந்தி யென்பது பூர்வபக்ஷமாம்.

சித்தாந்தமோ.

ஸ்பஷ்டோஹி ஏகேஷாம். 4-2-13 ஆஞ்சூத்திரத்தினுணர்தற்பாலதாம். அங்ஙனமன்றே:—இஃதொவ்வாததே, பரப்பிரஹ்மவித்திற்கும் தேகத்தினின்று முண்டுற்கிராந்தி உற்கிராந்திப் பிரதிஷேதத்திற்கோ தேஹியபாதானத்தன்மை யுண்மையின் எனயாது தொனிக்கப்பெற்றதோ ஹி, யாதினால் ஆகத்தினின்றே உற்கிராந்திப் பிரதிஷேதம் ஏகேஷாம் கண்ணுவர்தம் சாகையில் ஸ்பஷ்டமாய் வெட்டவெளியாய்க் காணப்பெறும். அங்ஙனமன்றே:—பிரு 3-2-11-இல், ஆர்த்தபா

கர்விஞவில் " யாண்டிஞ்ஞானிமரிப்பன் ஊர்த்துவம்மரி க்கும் பிரஹ்ம வித்துவினின்றும் பிராணன்கள், வாக் காதி கிரகங்களும் நாமாதி அதிக்கிரகங்களும் வாசஞ ரூப உட்டிதப்பிரயோஜகங்களும் மேற்கிளம்புகின்றன வா இன்று" வெனவினவ ஆர்த்தபாகர் யாஞ்ஞவற்கி யர் உத்தரம் "இன்றென்றுரைத்தார் யாஞ்ஞவற்கியர்", 3-2-11. என் றனுற் கிராந்திபக்ஷம் பரிக்கிரகித்து ஆயி ன் இப்பிராணன்கள் கிளம்பாவேற் சாவுறுனென்னுங் கடாநிகழுழி " அத்ரைவசமவ நீயந்தே" (ஈண்டேலய முறுகின்றன) எனப்பிரவிலயம் பிராணன்கட்குப் பிரதி ஞ்ஞைசெய்து அதன் சித்தியின் பொருட்டு " ச: உச்வ யதி..............ம்ருத: சேதே" (ச: அவன் உச்வயதி உசுவசிக்கின்றனன் பெருமூச்சிழுத்தல் குமுறுதலாதி கழறி ம்ருத: இறந்தனன், சேதே, நிச்சலமாய்க்கிடக் கின்றனன்) எனச், ச, சப்தபராமிருஷ்ட பிரகிருதனு க்கு உற்கிராந்தி பரியந்தம் உச்வயனுதிகள் கழறப்பெ றுகின்றன. தேகத்திற்கேயிவையாமன்றித் தேகிக்காகா வித்பாப்பிரகாண சமானத்தன்மையால் " அதனினின் றும் பிராணன்கள் கிளம்பா ஈண்டே சமவ நீயந்தே- லயமுறுகின்றன (சமவ நீயந்தே என்பது திருத்தப்பட வில்லையென்பதைக் காண்பிப்பான் மேலுமிங்கும் சமஸ்

கிருதபதங்காண்பித்தேம். திரிபுசெய்தார் என்பதவர் தங்கூற்றுதலால்)என்னும் மாத்யந்தினசாகையின் மாட்டும் அபேதோபசாரத்தான் தேகாபாதானமாய உற்கிராந்திக்கே பிரதிஷேதமாம். பிராதானியத்தாற்றேகிக்குத்தத் சப்தயோக்கியமுடைமையிருப்பினும் தேகதேகிகட் கபேதோபசாரத்தாற்றேகி பராமரிசியாயசர்வநாமத்தாற் றேகத்திற்கே பராமரிசத்தான் அதினின்றே உற்கிராந்தி ஈண்டு நிஷித்தமாமெனப்பஞ்சமிப்பாடம் பொருள் கோடற்பாற்றும். எவர்கட்கு ஷஷ்டிபாடமோ அவர்கட்கு வித்வத்சம்பந்தியாய உற்கிராந்தி பிரதிஷேதிக்கப்படுகின்றதென்பது அடைவுற்ற உற்கிராந்திப்பிரதிஷேதார்த்தத்தன்மையுண்மையின், இவ்வாக்கியத்திற்கு தேகாபாதானமேயாயது பிரதிஷித்தமாம். தேகத்தினின்று முற்கிராந்தி பிராப்தமாமன்றித் தேகிக்கின்றும். இதன்பொருள் "அவனது" என்பதாதியின் கண் அபாதான அபேக்ஷையேல் "நேத்திரத்தினின்றேனும் தலையுச்சியினின்றேனும்" எனத்தேகாம்சங்கட் குற்கிராந்தியபாதானத் தன்மையானே பிரகிருதங்கட் கீண்டு சம்பந்தத்தான் அடைவுற்ற உற்கிராந்தி நிஷேதபரத்தன்மை யானும் வாக்கியத்திற்கு, அவனது பிராணன்கள் தேகாம்ச சம்பந்தத்தினின்றும்

கிளம்பாவென வாக்கிய விபரிணமத்தான் அயலாற்று ஹும் அடைவுருததின் நிஷேதமடைவுறுதலின் சம்பந்த சாமானியார்த்தஷஷ்டியானும்,“பிராணனால் ரக்ஷிப்பித்துப் பிராணமயன்” என்பதாதி கர்த்ருகரணோபாதியுபஹிதத்வப்பிருகிருத சம்பந்த விசேஷ பரியவசானத்தான் அன்னிய சாகைக்கட்டிதமாய அபாதான சம்பந்த விசேஷ அபேக்ஷயின்மையான் அதன் கரணோபாதி பூதபிராணன்கள் தேகாவயவங்களினின்றும் கிளம்பாவென்பது வாக்கியார்த்தமென் றுய்த் துணர்ந்து கொள்க. இன்னும் “நேத்திரத்தினின்றேனும் தலையுச்சியினின்றேனும் அன்னிய சரீரதேசங்களினின்றேனும் அதாவதவயவங்களினின்றேனும் சிவன் கிளம்பப் பிராணன் றொடர்ந்து கிளம்பச் சருவவாக்காதி பிராணன்களுந்தொடர்ந்து கிளம்பும்”பிரு 4-4-2 என விங்ஙனமவித்வத் விஷயம் சப்ரபஞ்சமாய உற்கிரமணத்தையும் சம்சாரகமனத்தையும் தரிசிப்பித்து “இங்ஙனங் காமயமானன்” பிரு 4-4-6. என அவித்வத் கதையை உபசங்கரித்து “பின் அகாமயமானன்” பிரு 4-4-6 என வித்வாம்சனை வியபதேசித்து அவன் விஷயத்திலும் உற்கிராந்தியையே அடைவிக்குமேல் அசமஞ்சசமே வியபதேசித்ததாமன்றே! ஆதலின் அவித்வத்

விஷயத்திற் பிராப்தமாயகதி யுற்கிராந்திகட்கு வித்வத் விஷயத்தில் பிரதிஷேதமென வியபதேசம் பயனுடைத்தாவான் பொருள்கொள்க. அப்பிரதிபந்த அபரோக்ஷப்பிரஹ்ம சாக்ஷாற்காரமுற்றானும் காமகர்மாதி யற்றானுமாய பிரஹ்மவித்திற்கு உற்கிராந்தியேனுங்கதியேனும் ஒல்லாதாம்; நிமித்தமின்மையின். "ஈண்டு பிரஹ்மமினிதயிலப்பெறு" மென வித்திறத்தனவாய மறைகள் கதியுற்கிராந்திகளின் இன்மையைக் குறிப்பிக்கின்றனவாம்.

ஸ்மர்யதேச 4-2-14 கதியுற் கிராந்திகளினபாவம் மகாபாரதத்தே ஸ்மரிக்கவும் படுகின்றன. "யாவற்றையுந் தன்மயமாய சின்மயமாய்ப்பார்க்கும் அடையப்பெறும் பதமிலாத ஞானிக்குத்தேவரும் நெறியறிந்திலர்" "முனியின் பிராணன்கள் கிளம்பா அவன் சர்வகதன் வியாபி அவனால் வியாப்தமிவ்வியாவும் யாண்டு கிளம்பிச்செல்வன்" என்பனவாதியின் ஸ்மரணத்தானும் எனக்கொள்க. "சுக"னென்றற்றொடக்கத்தவயல் ஸ்மிருதியோ அபரவித்யா பலமெனக் கண்டமைக. சர்வ பூததிருசியத்வாதி யுபந்யாசத்தானென்க. சரீரமின்றிச் செல்லானுக்குச்சர்வபூதங்களைக் காண்பானுற்ற லேலனுங்கொல்லோ? "சுகஸ்து" என ஆண்டே அதுவு

முபசங்கரிக்கப் பெற்றதென்றுணர்க. ஆதலின் பரப்ரஹ்மவித்திற்குக் கதியுற்கிராந்திகளி னபாவமாம்.

இவ்வதிகரணத்தானே, அவர் முன்பின் சம்பந்தமுத்திபொருள் ஒன்றும் வரையாமல் "முழுதுந்தவறு" என்று கிறுக்கிய கிறுக்குக் கிறுக்காய் முழுதுந் தவறாய் முடிந்தமை விவேகிகளே காண்மின்! காண்மின்!! காண்மின்!!! காண்பித்த பொருளை முன்பின் பரியாலோசனை செய்து நோக்குதலன்றோ ஆரியராய சீரியர்க்கழகு. இஃதின்னும் விரிக்கின் மிகப்பெருகுமெனுங் கருத்தாற் கண்ணடிக்குட் பர்வதம்போற் காண்பித்தாம். மேற்போந்ததால் பஞ்சமி ஷஷ்டி வியவகாரமுந் தெளிந்து "அத்ரைவ சமவநீயந்தே" என்பதை அத்ரைவ சமவலீயந்தே என்று திரிபுறச்செய்தாரென்ற திரிபுந் திருந்தியவாறுதெற்றெனப் புலப்பட்ட தன்றோ! இனியேனுங் கண்டமைவாராக.

அற்றேல் சைவ வைணவ ஏகான்மவாத உபநிடதமெனப் பிரிவு செய்யப்பெற்றதே அதனைப்பற்றி யாதும் பேசாதொழிந்த தென்னை கொலோ வெனின்? நன்குபிரித்து நாட்டவில்லையென்று விட்டனமெனின்? ஏன் ஆங்காங்கு ஈச கேன கைவல்யாதிய சைவ உபநிடதமெனவும் நாராயணாதிய வைணவ உபநிடத

மெனவும் சர்வசாராதிய ஏகான்மவாத உபநிடதமென வும் பிரசங்கத்தாற் பிறங்கு கின்றதே யெனின்? சாடையாய்ச் சாற்றியதே யல்லாமல் இன்ன காரணம் பற்றி இன்ன பிரமாணத்தா லித்துணை யுபநிடதங்கள் இன்ன இன்னவையென வியம்பவில்லை யாதலின் எள்ள விடங்கொள்ளாதென்னினும் ஒரு திங்மாத்திர மிங்குக் காட்டுவாம். அதாவது மேற்கைவல்லிய உபநிடதத்திற் குக் காட்டிய கதி கேனுதிகட்கும் கோட லெளிதாம். கேனுதிகள் பரமாத்வைத உபநிடத மென்றே எமது கோட்பாடாம். அதன்கண் ஏதாவது ஆக்ஷேபமிருந்து வரைந்தாற் றிருந்தவரைவாம். சாந்தோக்கிய பிருகதா ரண்யாதியோ அளவிறந்த சாதன உபாசனைகளைச் செப்பிச் சாத்திய பிரஹ்ம வித்தையைச் சாற்றி யிருப் பது பிரசித்தமாதலின் அதைச் சைவ உபநிடதமென இவர் கோடல் நீலகண்ட பாடியத்தைத் தம் பாடிய மெனச் சரண்புகுந்தது போலாம். பிரசங்கத்தான் இவரை ஒரு கடாவுங் கடாவு கின்றனம்.

அதாவது இவர் நீலகண்டபாடிய அடியாரா? சிவ ஞான சுவாமிகளின் திராவிட பாடிய அடியாரா? என் பதே. இனி வரையின் முதலிலதைப் பிரதிஞ்ஞை செய்துகொண்டு அவ்வோர் சார்பினின்று நிந்தையா

தியை யறவே கைவிடுத்து வரையக் கலந் தொடுவதே கவினும். அன்றியும் இதுவரை வாதக்கதைகள் நூலி லும் நடக்குமிடத்தும் அளவிறந்தன கேட்டுக் கண்டு ளேம்.ஓரிடத்தினும் ஏதாவது பிரமாணந் தரினிவரைப் போல் புரட்டிவிட்டது புகட்டிவிட்டது என்று சொன் னதைக் கேட்டதுமில்லை கண்டதுமில்லை. சாமானிய மாய்ச் சர்வ அச்சியந்திர சாலைகளினும் அச்சிட்டு வரு வனவும் தந்தம் பாலுள்ளனவும் பிழை பிழை புரட்டு புரட்டு புகட்டு புகட்டு என்னின் யார் எதனை நம்பிச் சிரவணஞ் செய்வது, அதனினும் வாதக்கதையில் நினை த்தலு மிங்ஙன மாசன்றோ? வாதி பிரதிவாதிகள் பரஸ் பரம் ஒப்புவரா? ஒப்பின் அவ்வாத மொவ்வாததே; ஆதலி னக் குணத்தையும் இவரறவே விட்டொழிப்பா ராக. இது நிற்க, இனிச் சர்வசாராதியோ இவரே அத்வைத நூலெனக் கண்டு மருண்டு பாக்கிய மின்றி "தெருள் விழியோர் துணிவிதெனத் தேர்ந்தனுபூ தியிற்கொள் வர், மருள்விழியோர் திரிவிலிதை மாயாவா தமதென் பர்."

என்று பெரியா ருரைத்தருளியபடி மாயாவாத மென விகழ்ந்து பக்குவமில்லாது எட்டாத திராக்ஷைக் கனி புளிக்கும் வேண்டாமென்ற கதைபோற் புறமே போந்தனர். நாராயணுதியோ, நாராயண சப்தாபித பரப்பிரஹ்மமே சர்வான்மக மென்றும் அதனை யுணர்ந் தான் அப் பூரணானந்த வடிவமேயாய்ச் சருவ அனாத்

தத்தி னின்று விடுபடுவனெனவும் வச்சிரத் தம்பம் போல் நாட்டியிருப்பதால் அதையும் அத்வைதிகள் பாற் படிந்து வந்தித் தீந்து விட்டு இவர் வெறுங் கையராய்க்கேனுதி போன துன்போடு துன்புற்றுச் செல்க; அல்ல ததன் மெய்வழிவந் தின்புறுக.

நாராயணுதியென்பதனுதி சப்தத்தால் ஸ்ரீஇராமச் சந்திரதயாநிதி ஸ்ரீஜிதேந்திரிய வாயுகுமாரர்க் கனுக்கிரகித்தருளிய முக்திகோப நிடதமுமாமென விவர் நற்சம் மதமாம், என்னை? இவர்க்கு இராமநாமமே செவிகோடற் குரித்தன்ருதலின். அவ்வுபநிடதத்தே அளவிறந்த விதமாய் அத்வைத உபதேசம் செய்தருளியது மன்றிச் சீதை நாயகன்மாருதிப் பெருந்தகைக்கு இரண்டாவதத் தியாயத்தே சம்பிரஜ்ஞாத (சவிகற்ப) அசம்பிரஜ்ஞாத (நிர்விகற்ப) சமாதிகளைச் சவிஸ்தாரமாய்க் கூறியருளியதன் உபாய வாசனுக்ஷயமுங் கூறியருளி யிருத்தலின் "வேதாந்த சூத்திரத்திற்குஆதாரமாய் நின்றஉபநிடதமனைத்தும் யோகபரியந்தம் பேசுமென்று வியாச முனிவர் கூறியதாகக்காணப்படலானும்" எனயாதொரு ஏதுவுமின்றிக் கட்டிவிட்ட கட்டுக்கதையும், பரம சப்தத்தை எடுத்துத் தூரத்தே எறிந்து விட்டு "யோக பரியந்தமே வேதசிரசுகள் கூறு மென்று ஸ்மிருதி

கூறுகின்றமையால் ஞானபாதம் சிவாகமத்தினுற் கூறக் கிடந்தது” (இந்தச் சிவாகமந்தானு அவர் முற் கூறிய வாறு வேதத்திற்கு மகோப பிருங்கணமென்னும் பேரு ரையானது நன்று! நன்று!! மூலத்திலில்லாத ஞானபா தத்திற்கும் பரமயோகமாய சமாதிக்கும் அருக்கன்போ லுற்றதன்ரு! அதனுற்ருன் பேருரையென்ருர். வாளா வுரைப்பரா! இதனுனே தான் இவரை யொத்தபெரி யோர் மூலத்திலில்லாத பாகங்களை யெடுத்து விரிப்ப தே பேருரை யென்றும் மூலத்திலிருப்பதை விரிப்பது சிற்றுரை யென்றுங்கொண்டார் (விரிப்பானேன் அறிஞ ரே உய்த்துணர்ந்து கொள்க) என்றும் “சிரவணமனன நிதித்தியாசன சமாதி என்னும் நான்கனுள்ளே பிருக தாரணியோப நிடதம் நிதித்தியாசனவரையில் மாத்தி ரம் உரைத்து நின்றமையால், சமாதி சிவாகமத்தினுற் கூறக்கிடந்தது” என்றுந் தமது கண்டன கண்டனத் திற் கட்டி விட்ட கட்டுக்கதையும், திட்டு முட்டாடித் திசை தப்பித் தட்டுக் கெட்டுத் தடுமாறிப் போய வாறு காண்க. இன்னணம் ஸ்ரீரகுநந்தனர் கூறியருளியிருப்ப தான் மாத்திரமா இல்லை யில்லை. வராக உபநிடதத்தில் நான்காவ தத்தியாயத்தில் ரிபு நிதாக சம்பாஷணையில் சுபேச்சை விசாரம் தனுமானசி சத்வாபத்தி அசம்

சத்தி பதார்த்தாபாவனை துரியகாமி இதனையே துரியா தீதமெனவும் புகல்வர். இவற்றுண் முதன் மூன்று மப் யாசதிசையும் ஒன்றனுப வதிசையும் மற்றையமூன்றும் முறையே மனோலய வாசனுக்ஷயமடைந்து தன் முயல் வானுகர்வும் பார்முயல்வா னுகர்வும் காட்டலோட்டகதி யும் ஆமென்ப தையமற வித்தரித்துக் கூறியிருக்கும் பெரு நிருவிகற்ப சமாதிப் பெரும் பேற்றுனு மென்க. "மாண்டூக்கியத்தே சிவபிரானைத் துரிய நிலைக்கண்ணே வைத்துரைத்தலான், துரியாதீதஞ் சிவாகமத்திற் கூறக் கிடந்தது" என்றார். இஃதோர் மதிமருட்சியேயாம். என் னை ? அகார உகார மகாரங்களையும் அர்த்த மாத்திரை யையும் பிரித்து அவற்றிற்குரிய நான்கவத்தைகளினும் வியஸ்த சமஸ்தமாயும் பிரஹ்ம விஷ்ணுருத்திராதிகளை யும் துரிய பரசிவத்தையும் நுதலியிருப்பதைக்கண்டு மயங்கியதானென்க. துரியந்துரியாதீதமென்பது சவிக ற்ப நிர்விகற்பசமாதியே யன்றித் துரிய சிவமொன்று துரியாதீத சிவமொன்று என்று மயங்கற்க. விருத்தி யுண்மை யின்மை கொண்டேயவத்தாபேதமாம். முதன் மூன்றைக் கொண்டே துரியம் என்னும் பெயரேயன்றி யுண்மையு மன்றென்று துணிக. இப்பொருள் விரிவாய்க் காண அவாவின் யாம் மொழி பெயர்த்துள்ள வேதசார

சமுத்தரணமென்னும் தோடகத்தே கண்டுகொள்க. அல்லது மூலத்தேனுங் காண்க. துரிய சிவ இலக்கணமோ நித்தசுத்த புத்த சத்திய பரமானந்த அத்துவிதமாம். இதற்குமேலொன்றெங்கேனு மிருப்பின் அவர் கோலிக்கொணரலாம். மாண்டூக்கியத்தே துரியாதீதத்தைத் துரியத்தே யடக்கிக் கூறியமாற்ற மறிந்திலர் போலும். எங்ஙனறிவர்? அதன்மெய்யுரையாய ஸ்ரீகௌடபாதகாரிகை அவருக்குப் பொய்யுரையாயது. இவர் செய்த புண்ணியமே புண்ணியம். இவர் இனிச்சாந்தோக்கிய மோதி தேஜோப்பன்னமென்னு முப்பூதங்களைக் கண்டு தைத்திரியத்தோதிய ஐம்பூதங்களை மறந்து விடுவார் போலும். ஐம்பூதம் ஆகமத்தே தான் நுதலப்பெறுமென்றும் பொறிப்பார் போலும். "மரணமடையுங்காறும் வேதாந்த சிரவணத்தை விடற்க" வென்னுஞ் சுருதியைக் காண்பாராயின் மனன நிதித்தியாசன சமாதி மூன்றும் ஆகமத்தே தான் நுதலப் பெறுமென்றும் பொறிப்பார் போலும். ஈண்டாகமசப்தம் சைவாகமத்தின் மேற்றும். அடைகொடாதொழியின் வேதத்தையே குறிக்குமாற்றலான்மருளா வண்ணமுணர்த்தினுமென்க. விவேகிகளோர்ந்து கொள்ளற்பாற்று மிதனையென்று வற்புறுத்திக் கூறுகின்றும். கண்டன கண்டனத்

திற் பொறித்த இக்கதை இங்ஙனந்துளாக, இன்னு மொன்று துளாவதை கண்ணுறுமின்! கார்க்கி யாஞ்ஞ வற்கியர் சம்வாதத்தில் தகராகாச துரிய நிலைக்கு மேற்பேச வொண்ணுதென யாஞ்ஞவற்கியாற் றடுக் கப்பெற்ற தாதலின் துரியாதீதம் சிவாகமத்திற் கூறக் கிடந்த தென்ருர். அதனினும் அதிகாரவர்ச்சித துரியா தீதசிவபோக நிலை சிவாகமத்தினுற் கூறக்கிடந்ததென் ருர். அவண் பிருதுவியாதி காரியவர்க்கங்கள் யாதின் பால் யாதின்பாற் குறுக்கும் நெடுக்குமாயிருக்கின்றதெ னக் கார்க்கிவினவிக் கொண்டே வருமீற்றிலெதன்கண் பிரஹ்மலோகங்க ளென்னும் அண்டாரம்பக பூதங்கள் குறுக்கும் நெடுக்குமாயுளவெனவினவ அது அவாங்மா னசமென்னும் பொருடோன்ற அதன்மேல் வினவாதே யெனத் தடுத்தனர். இதன் கண்ணேனும் இதற்கயற் பாலுற்ற அந்தர்யாமி யக்ஷரப் பிராமணங்களிலேனும் பிரஹ்மத்தைத் தவிர்த்து அப்பொன்று மில்லையென் றும் அது அவாங்மானச கோசரமென்றும் புகலப்பெற் றதேயன்றி நனுக் கனுத் துயிற் றுரியந் துரியாதீதமென் னும் ஐந்தவத்தைகளேனும் சீவநனு சீவகனு சீவதுயில் சீவதுரியம் பாரநனு பரக்கனு பரதுயில் பரதுரியம் சிவ நனு சிவகனு சிவதுயில் சிவதுரியம் என்னும் பன்னிரு

அவத்தைகளேனும் புகலப்பெறவில்லையன்றோ. பெறாத போது ஈண்டு தகராகாச துரிய நிலைக்கும் துரியாதீத சிவபோக நிலைக்கும் வேலையாது? யாதுவினவப் பெற்ற தோ அதற்கு மாத்திரம் விடைவிடப்பெற்றது. அவத்தைபைப்பற்றி வினவவுமில்லை விடையீயவுமில்லை. எப்பிரசங்கத்தில் எப்பிரசங்கமிருக்கலா மென்பதறியாமற் பேனாப் பிடிப்பின் அவர்க்குபாவரே எதிர் நின்று வரைவார். சிவபோக நிலையென்றாரே! போகமெனிற் போக்தா போக்கியம் பகரவேண்டிவரும். யாமொப்பிய துரியத்தின் கண்ணே இத்திரிபுடித்தோற்ற மன்றித் துரியாதீத மாயநிருவிகற்ப சமாதியின்கண்ணின்றாம். இவர் துரியாதீதமே திரிபுடி சகிதமென்னின் இவர் துரிய மென்னமாமோ பரமசிவனுக்குத் தான்றெரியும். அன்றியும்யா தனுபவிக்கப்பெறுமோ அஃதநித்தியமாம்; அனுபவிவிஷயமாதலின், கனியாதியொப்ப. அன்றியுங் கரணக்கெட்டாவதனைத் தானாயிருந்தனுபவித்தலின்றிக் கரணத்தாலனுபவித்தன் முரணா மென்பதற்குச் சிறிது பிரமாணமுங் காட்டுதும்:—கைவல்லியோபநிஷத், சிந்திக்கக்கூடாதவராயும் காணக் கூடாதவராயும்.....இருக்கிற பரமேசுரரை. என்னை அறிகிறவரில்லை. ஆத்மபோதோபநிஷத்: நான் ஊகத்தினாலறியப்படத்தக்கவனல்ல. நாரத

பரிவிராஜகோபநிஷத்:—நினைப்புக் கெட்டினதுமல்ல சுவானுபவத்தினாலேயே அறியத்தக்கது. முண்டகோபநிஷத்;—மனத்தினாலு மெட்டி முடியாத ரூபத்தை யுடையதாயும்; அது அதிருசியம் கவரக்கூடாதது இதனானே இவ்வுபநிடதங்களையும் நம்பா லொப்புவித்தவராயின ரன்றோ.

## பிரஹ்மகீதை.

வாக்குமனமுங் கண்ணுமற்றுள விந்தியங்களுமே நோக்கரிய பரஞ் சுடரை நோக்கியிவை செலமாட்டா; மோனபாவத்தே முடியுமந்நிலமதே முடிவு; இது வன்று நின்ற திதுவன்று நின்றதென வோதலன்றிமறையும், இதுவென் றுரைக்க முடியாது நின்றவெரிதும்மு வெய்பமழுவோய்,

## இலிங்கபுராணம்.

உள்ளும் புறம்புமுணர் வரியதுரியாதீதமாய்நின்ற தோன்றல். நினைவினுக்கெட்டாதொன்றாய்.

## காசிகாண்டம்.

மொழியுடன் மனதுக்கெட்டா முழுப்பரம் பொருளே போற்றி.

திருவிளையாடற்புராணம்.

மனத்தால் வாக்கால் அறிவருஞ் சோதியெங் கோன்.

பாகவதம்.

நினைவருஞ் சுடரே நின்னை நிகழ்த்துமா றறிகிலே மால். மனது முதற்கெட்டாத வத்துவாகி.

தேவாரம்.

மனத்தாலும் நினைப்பரியன் என்பன எண்ணிறந் தனவாம்.

திருவாசகம்.

சித்தமுஞ் செல்லாச் சேட்சியன்
நூலுணர் வுணரா நுண்ணியோன்
உரையுணர் விறந்து நின்றுணர் வதோருணர்வே
மனவாசகங் கடந்தான்; இனையன பலவாம்.

திருமந்திரம்.

ஆயுமறிவுங்கடந்த வானுக்கு;என்பனபல.பிரபுலிங் கலீலை:—உரைமன மிறந்து நின்றவொரு சிவலிங்கம்; என்பன ஒரு சிறிதே ஈண்டு தரிசிப்பித்தனம்; உணர் வுடையார் உய்த்துணர்க. இதனானே யிவர் தம் திரி

புடித்துரியா தீதம் மறுபடிவாராது போயவாறு கண்டு கொள்க. அல்லது தகராகாச நிலேயே யாயினுமென் சாதனபாகஞ் சாற்றியதென்று வைத்துக்கோடக் கூடாதா ஈங்கு சம்வாதத்தே அக்கதையின் றெனின் மேற்கூறியதே போதியதாமென்க. இதனுற்றுனவர் வேதந்தரமும் ஆகமம் தமமுமென வறைந்தா ரிவ்விடத்தே. அஃது முண்மைதா னன்றே. மூலமாயவேதமும் அதன் பேருரையாய ஆகமமும் தாமுந் தமமுந்தான். ஏனென்னின் முன்மொழிந்த இலக்கணப்படி மூல வேதத் தில்லாத திரிபுடித் துரியாதீதத்தை ஆகமம் கூறுகின்றதன்றே? அந்த மகிமையை நீக்கலாமா! ஆகமம் நமக்குடன்பாடின்றே வெனின்? பரம உடன்பாடெனினும் இத்துணைப் பேராசிரியர் கூறும் போலியுரைமாத்திரம் எம்மான் மறுக்கற் பாலதா மென்க. இம்முறை சிவஞான போதவெண்பாவிற்குச் சிவஞான சித்தி பேருரையுமாமன்றே அதன்கணில்லாத கதைகளிதன்க ணிருத்தலின் மற்றவற்றையு மிங்ஙனுய்த் துணர்ந்துகொள்க.

இங்ஙன் பலவிடத்தே சாதனபாகங்களைக் குறித்துக் கூறும் பல சுருதிகளைக்கண்டு இதுதான் வேதமுக்கியக்கருத்தென்று துணிந்தது குருமுகமாய்ப் பயிலாத

தானும் ஆற்றலின்மையானும் எனத் துணிந்துகொள்க. ஆப்தனுல் நெறியறியானும் நெறிகடக்கு மாற்றலில்லானும் அரித்வார பரியந்தம் புகைச் சகடத்தேசென்று இமகிரிச்சாரலைக்கண்டு நஞ்சுந்தரப் பெருந்தகையாற் பாடி யருளிய கேதாரங்காண்பா னீண்டு நெறியின்றுசைனுவந்து திபெத்தின்கண் ணுழன்று தெற்கு நோக்கி வந்தாற் காணலாமெனத் திரும்பியதை யொக்குமிவர் நுண்மதி யென்க. முக்திகோபநிடதம் இரண்டாவ தத்தியாயத்தானும் வராகோபநிடதம் 4-வது அத்தியாயத்தானும் இங்ஙனமிவர் கூற்றுக் கூறு கூறுயதன்றி அதனை வைணவோப நிட,தமெனக் கூறலு மொல்லாதென வறிக. அன்றி யதன் முதலோத்தில் நூற்றெட்டு புநிடதங்களைவிரித் துரைக்கப்பட்டுளதே அதன் கண்ணேனு மிவர் முப்பிரி வொருசிறிதுளதா பரிதாபம்! பரிதாபம்!! இவர் பிரமாணமில்லா வெற்றுரை காணுந்தோறும். இனிமேற் கூறியவாறு வெளிப்படையாய்க் கணக்கிட்டு ஏதுக் காண்பித்துப் பிரித்து பொறித்தனுப்புவ திவர்கடனும். இனி இவர் நிர்க்குணஞ் சகுணமென்னு மிரண்டு முரண்கொள் தருமம் ஒருபொருட்பா லுளதென்று நுதலுவது எமக்கும் சம்மதமேனும் குணேடன்பாடு கற்பிதமென்பதே யாம்.

என்னை ? ரச்சுத்தன்மையும் சர்ப்பத்தன்மையும் ஒன்ற ன்கண் மெய்யாய் எய்தா. கானற்சலந் தோற்றுமிடத்து மங்ஙனே; அன்றாயினோ! பூத்தன்மையும் நீர்த்திரனும் ஓர் பாலெனிற் பங்கம் கண்ணுறவால்வேண்டும். அல்ல திரமேனும் புலப்பட வேண்டும்; அங்ஙன மின்மையின் கற்பிதமேயாம். அன்றியும்,உண்மையாய்க் குணம் சிவத் திற் கயலாயுளதா மேற் பரிபூரண நாசமாம். ஆகவே "பெருமையி னிற்சங்கோசம் பிறவாது பிறக்குமெனி லருமறை வாக்கியம் பொய்யா மப்பிரமாணமு மாகும் பொருவில் பரானந்த பரிபூரண மெய்ச்சுடராகுந் தெரி வருமா தேவனல்லாற் றிகழ்வதொரு சிறிதுமில்லை. இதுவே முடிந்த நில மெல்லாத் தர்க்கங்களுக்குங் காட் சியே, முதலாம் பிரமாணங்களுக்கு மொழியும் வேதா ந்தங்களுக்கும், விதமாம் புராண மனைத்திினுக்கு மிருதி களுக்கும் வேதத்தின் மதமாம் விச்சை யனைத்தினுக்கு மன்னுமா பாரதத்திற்கும். ஐயன் சைவாகமங்கட்கு மரியாக மத்துக்கும் மெனது பொய்யின்றிய வாகமத் துக்கும் புத்தாகமங்கட்கு மருகன், செய்யுமாக மத்துக்குஞ் சித்த ரியக்கர் கந்தருவ, ருய்யும் பரிசுமற் றுள்ளோ ருரைத்த வாகமங்கட்கும். என்பதாதிய மானங்களோடு முரணுமென்க. அன்றியும் "ஏகமே வாத்துவிதமெ" ன்னு மறைக்கும் விருத்தமாம். என்

னை? சுருதி மதி விஞ்ஞாதியாதி காணப்படலின் சுவ கதபேதம் வருமாலோவெனக் கடாவும் வேட்கையில் "ஏகம்" ஒன்றெனவுரைத்து சுவகதபேத நீக்கியுண்மை யானும் சச்சிதானந்த சாஜாதிய நாநாசிவர் காணப்பட லின் சஜாதியபேதம் வருமாலோ வென வினவும் விழை வில் "ஏவ" ஏ என்னுந் தேற்றமெனவுரைத்துச் சஜா திய பேத நாக்கி யுண்மையானு மென்க. இவ்விரு வகை வேறுபாடும் நீங்கியதியாங்ஙனங் கொலோ வெனின்? விருத்தியாதி யுபாதியானுற்றமை யானும் அவித்தை நானுத்துவத்தா னுற்றமையானு மெனச் சுருதி யுக்தி பூர்வகமாய்க் குருமுகத்தா னுணர்ந்து கொள்க. அற்றுயினும் மாயை யுண்மையின் விஜா திய பேதந் தீர்தலெளிது கொ லோ வெனின்? அதன் பொருட்டே "அத்துவித" மென்னும் பதமாம் இரண்டாவதின்று மென்பது அதன் பொருள் அன் மைப் பொருட் கண்டனமும் உடன்படின் மறுப்பும் முன்னமே பன்னியுள்ளேம். ஆரோபங்கட் கதிட்டான சத்தா திரிக்த சத்தையின்மையின் மாயைஅநிர்வசனீயப் பொருளாமென மதிக்க. மதிக்கவே அதன் காரிய குணுதியு மத்தகைத்தே. உபாசனையின் பொருட்டு கூட்டியிருப்பதைக் கண்டு மயங்கற்க; மயங்காதிருப்

பான்;இம்மானத்தையு மனனித்துக்கொள்க. அதாவது: எப்பொருளு மாயையினு லெனச் சிலவரியம்புவர்கள், மெய்ப் பரமன்றனை யொழிய வேறொரு மாயையு மில்லை, ஒப்பரிய பரனொழிய ஒரு மாயையுண்டாகி, னப்பெருமன்றன் பெருமைக்கது நேரே யழிவன்றோ. என்பதே. இன்னணமாகவே இவர் தஞ் சகுண நிர்க்குணக்கூத்தும் நிவிர்த்தியாய் விட்டது. இனிச் சகுணோபாசனையா லெய்தும் பயன் பிரமலோக மென்னுஞ் சிவலோக மென்றார். சிவலோகமாயினு மாகுக; வைகுண்டமாயினு மாகுக;சத்தியலோகமாயினுமாகுக. அதன்மாட் டெமக்கு விவாதமின்றாம். ஆயினும், பிரமலோகம் என்பதற்கு ஸ்ரீபகவற்பாத முனிவர் நிரன்வய உபாசகர் பலத்தானத்தே “பிரமத்தைப் பார்ப்பது” என்று பொருள் கோடல் பொருந்தாதென்னு மிவர் கூற்றே பொருந்தாதாம். என்னை?சகுணோபாசகர்கட்கற்றாயினும் நிர்க்குணோ பாசனையான் முறையே அப்பிரதிபந்த சாக்ஷாற்கார முற்றார்க்கு அகாமயமானர்க்கு அத்திரப்பொருள் பிரமலோக பதத்திற்குப் பிரகரணம் பற்றி ஆங்காங்கு கூறியிருத்தலே அமைவுடைத்தா மென்றுணர்க.

"அத்தியாசிரம பாசுபத யோகிகட்கு முத்தித் திவ்யஸ்தானம் பிரமலோக மெனப்படும் சிவ லோகமா மெ" ன்றார்; இதுவோ முற்றுங் குற்றமாம். என்னை? அத்தியாசிரம யோகி பரஹம்ச சந்யாசி யென முன்பே கூறியிருத்தலின் அத்தகையர்க்கேதாவது பிரதிபந்தத்தால் ஞானக்குறை பாடிருக்குமாயின் மாத்திரம் அவ்வுலகங்களிற் சென்று அவ்வுலகாதிபர் வாயிலாய்ப் பூரணஞான முற்றுப் பிரஹ்மப் பிராப்தி யெய்தவேண்டற் பாலதேயன்றி ஈண்டே அப்பிரதிபந்த ஞானம் வாய்த்திடின் லோகாந்தர கமனமின்றெனத் தேர்தலுடன் அப்பிரகாணப் பிரமலோக பதத்திற்கும் ஸ்ரீசங்கர பகவற் பாதீயப் பொருளே யமையுமெனக் கொள்க. நிரன்வய உபாசகரெனினும் அத்தியாசிரம யோகியரெனினும் ஒவ்வுமேனும் நிரன்வய உபாசனை இல்லறத்தானுக்குங் கூடுமாதலின் இதனுள் வேறுபாடு கண்டு மயங்கற்க; இவையெல்லா மாசிரிய முகமாய்த் தெரிவுறின் மிக நலமாமன்றித் தாமே தாமாய்ச் சிற்சில வற்றை மதிக்கெட்டியமட்டும் பார்த்துவிட்டு இதுவே பொருளென வெளித்துணிவுகொண்டு அவைக் கண் வழக்கிடல் அறிவுடையார்க் கழகன்றுமென் றுணர்க. எப்பத மெய்பொருளை யாண்டு பயக்குமோ ஆண்டு

அப்பொருள் கோடலே மதிமான்கட்குக் கவினும். அன்றி யாண்டு மொரே படித்தாய் "எல்லச்செட்டிலக்க ஏகலக்க" என்பதொப்பக் கோடல் உணர்வுடையோர்க் கெழிலன்றாம். இதனுனே யிவர் பரலோகப் பெருஞ்சழக்கு மிழுக்காயவாறு கண்டுகொள்க.

இனி "அனுவிருத்தி சப்தாத்" என்னு மிறுதிப் பிரமசூத்திரத்தினு லறியப்படுமாதலினல் நிர்க்குணப் பிரமநிலை முக்கியவேதப் பிரதிபாதிதமாகிய வைதிகபாசுபத யோகப்பிரமத்தினும் தாழ்ந்தநிலைக் கண்ணதேயா" மென்றார். இச் சூத்திரமுள்ள அதிகாணத்தே ஆதியிற் சகுணப் பிரஹ்மோபாசகனுக்கு ஈசனுெப்ப ஐசுவரியம் நிரங்குசமா? சாதிசயமா? வென வையம் நிகழ்ந்து நிரங்குசம் பூர்வபக்க மாங்கால் சகதுற்பத்தியாதி வியாபார வர்ச்சிதமாய்ச் சாதிசய மைசுவரிய மென சித்தாந்திக்கப்பெற்றுப் பின் னனேகவிதமாய்ச் சங்கித்துச் சமாதானித்து அவனதயிசுவரியம் சாதிசயமே லழியுமன்று? அழியவே, பிறப்புறுமே யெனக் கடாவப் பரம கிருபாளுவாய பகவான் வாதராயணர் அருளிச்செய்தார். அநாவ்ருத்தி சப்தாத நாவ்ருத்தி சப்தாத் 4-4-22 என்னுஞ் சூத்திரத்தை. இதன்பொருளோ யாவர் அர்ச்சிராதி நெறியாற் பிரமலோக மெய்தினரோ அவ

ர்க்கு அநாவிருத்தியே வரவின்மையே. "புநராவிர்த்தி யின்று" என்பதாதிக் கிரமமுக்தி யுரைக்கும் சப்தத் தான் என்பதாம். நிர்க்குணப் பிரஹ்ம வித்துக்கட்கோ ஆவிருத்தி சங்கையேயின்றும். யாதினுற்சகுணப்பிரஹ்மவித்திற்கும் நிர்க்குண ஆசிரயத்தானேயே ஆண்டிருந் தாவிருத்தி ஈண்டில்லையோ? அயல்வகையா லன்றே! ஆதலின் நிர்க்குணப் பிரஹ்ம வித்துக்கட்கு நிரஸ்த சமஸ்தப் பிரபஞ்ச சுவப்பிரகாச சிதேகரச நிரதிசய ஆனந்த வடிவமாய வஸ்திதியென்பததி சோபனமாமென்க. இருமுறை யுரைத்தது முடிவின் பொருட்டாம்.

இதனனே சகுணப்பிரஹ்ம வித்திற்கு லோகாந்தர கமனமாய் ஆண்டு ஞானம் பூர்த்தியாய் ஆவிருத்தியின்றென்றும் நிர்க்குணப் பிரஹ்மவித்திற்குப் பிரதிபந்த மின்மையின் ஈண்டே விதேக கைவல்லியமெய்து மென்பதும் பெறலாயது. இதனை யுய்த்துணர்ந்து இவர் தஞ் சங்கையை யொழித்துக் கொள்வாராக; அறிஞர் கட்கும் இவர் கூற்றுய "நிர்க்குணப் பிரமநிலை சகுண வைதிக பாசுபதத்தினுந் தாழ்ந்தநிலைக் கண்ணதேயா மென்பதும்" தெற்றெனப் புலப்படுமென் றுணர்க.

இவர் கூற்றிற் சிறப்பின்றென் றில்லை; இன்றேற் சலம்வைட்பாரா? அஃதென் னெனின்! குருசேவை

யானே யர்வு முறுமெனல் கேட்டும் தீர்த்தயாத்திரை செய்தல் மிகமதியுடைத்தன்று? சிவபக்திஞான சாதக மெனின் மகம் புரிதன் மிகமதியுடைத்தன்று? ஈண்டே லட்சரூபாய் கிடைக்குமெனின் கடலோடு மலையோடு தடுமாறிக் கொணர்தன் மிகமதிப்புடையதன்று? இவற்றை நிகர்ப்ப ஈண்டேபரிபூரணானந்தபரமாத்வைதசுத்த சிவமாய்ச் சுகமாயிருப்பதினும் இறந்து பரலோகஞ் சென்று பிரமனருளால் அல்லது மற்ற லோகத்தே மற்றையபருளால் நதலிய வடிவாய்ச் சுகமாயிருப்பது மிக மதியுடைத்தன்று ? இவரென் முன்பின் ஞாயாமலா வரைவார்; வரைபார் வரையார்; விரிப்பானேன் விவேகிகளே விவேகித்துக் கண்டுகொள்க. இதனானே "யோகத்தை யுபநிடதங்கள் கூறி அந்த போகத்துக்குப் பயன் பிரமலோகம் (சிவலோகம்) என்று கூறலான், ஞானபாதம் சிவாகமத்தினுற் கூறக்கிடந்தது" என்னு மிவர் மையலும் அறவே நூக்கப் பெற்றதாம்.

இனி "வேதாந்தங்களெல்லாம் ஸ்ரீஞானசம்பந்தர் முதலிய வைதிக சைவசமய ஸ்தாபனு சாரியர்கள் அருளிய திராவிட வேதங்களின் பாலனவேயாக, சந்நியாசியாரது குலகுரு முதலாயினரெழுதிய பாஷ்யமெல்லாம் வேதநெறியிற் கோடிநிற்றலால், அவரெல்லாம் வேதத்தைக் கோறல் செய்தவரேயாவர்" என்றார். மூவ மே:

ழியும் முனிமொழியு மொன்றென்று ஔவையா ரரு ளிச்செய்ததையு மிவரறிந்திலர் போலும். முனி மொழிக்குப்பாடியபேத முண்மையின் ஸ்ரீசங்கரப்பெரு முனிவரருளிய பாடிய மொவ்வுங் கொலோவெனின்? ஒவ்வுஞ்செவ்வையை முன்பே வச்சிரத்துணைப்ப நாட் டியிருத்தலின் ஈண்டுவிடுத்தாம். ஸ்ரீஞான சம்பந்தமுனி வராதியருளிய தேவாரமும் திருவாசகமும் மற்றைய வும் பரமாத்வைதமே யென முன்பே காண்பித்திருத்த லின் ஈண்டுங்காண்பிப்பதடாதென விடுத்தாம். இன்ன ணமாக யிவர் வேற்றுமைகண் டெள்ளிய தெள்ளற் பாலதேயாமெனக் கொள்க.

இனி ஸ்ரீபகவற்பாத ஆசார்ய சுவாமிகளை லோக குருவென்ன லடா தென்கின்றார். இதுவுமோர் பெரும யலேயாம். என்னை? சர்வப்பிரசித்தமாய் வழங்கி வருவ தை இவர் தவமாற்றி மாற்றினும் மாற்றவொண்ணமை யானும் இவரும் பிரமாணமாய்க்கொண்ட ஸ்ரீசங்கரவிஜ யத்தே ஸ்ரீவியாசர் அப்பெயர் நிகழுமாறு வரப்பிர சாதஞ்செய்து சென்றமையானும் ஸ்ரீமத்சங்கர அனு க்கிரக லீலா விக்கிரகமாதலினானும் பிரஹ்ம விஷ்ணுக் களே பீடா யமர்ந்து நிலவுற்றமையானும் இன்னணம் மற்றையர்க்கு இவ்வுலகி லிலங்கக் காணமையானும்

முன் னரையர்களும் அங்ஙனே வழிபட்டு வந்தமை யானும், இஞ்ஞான்றுள்ள மைசூர் திருவாங்கூர் கொச்சிப் பேரிறைவரும் வட நாட்டுப் படோதாராமுத லிய இருபத்தைந்து பெரிய மன்னரும் அங்ஙனே சிரு ங்ககிரியிலெழுந்தருளிய ஆசார்ய மானுஷ லீலா விக்கிர கத்தை வழிபட்டு வருகின்றமையானும், ஆங்கிலேய அரசாங்கத்தாரு மங்ஙனமே யொப்பி வேண்டிய மரியா தைகளைச் செய்கின்றமையானும் பாஷண்டிகள் தவிர மற்றையருக் கிதன்கண் விவாதமின்மையானும் ஈசனி டத்தும் ஈசன் சீட பரம்பரை மாட்டு மிப்புத்தி தோற் றல் பாப கர்மாவிர்ப்பாவமே யாதலானும் சிற்சிலபாஷ ண்டிகளே யிவ்வன் நிந்தித்து "பெற்ற பேரின்பப்பெரி யோர் சரித்திரத்தைக் குற்றமென நாடுங்கொடியோர் கள், பற்றறுக், கோசகாரப் புழுப்போற் கோடான கோடி சன்மம், மாசார்வரென்றேமதி" என்பதிற்கொ ப்பத் துன்புற நிற்ப ஏனைய யாவரும் புகழ்ந்துஇன்புறு தலானும், உலகத்தில் மெய்ஞ்ஞானம் பெறவேண்டி னோர் ஸ்ரீசங்கர பகவற்பாத பரம்பரைக்கணுற்றே யுறவே ண்டி யிருத்தலினும் அத்தகைய மெய்ஞ்ஞான மரு ளுங்குரவருமவரேயாதலினுனும் மற்றையர் சிலர் மறை க்குமயங்கிப் பொருட் கொண்டமையானும் வேறு சிலர் ஈசுவர ஆஞ்ஞையை யனுசரித் தக்காலத்திற்குத் தக்க

படி யாற்றியிருத்தலினுனும் இன்னுமனேக பிரபலநியாயங்களானுமென்க. ஸ்ரீவியாசர் வரப்பிரசாதத்தாதல் தகுங்கொலோவெனின் பரமாசிரியராதலி னச் சங்கைக் கேயிடனின்றுமென்க.

இனிப் "பிரமந்தானே அஞ்ஞானத்தினுற் சீவான்மா ஆகின்றதெனக் கொள்ளின், அது மேலே எடுத்துரைக்கப்பட்ட அநேக சுருதிகளுக்கு விரோதமாமென்ப" என்றூர். இதுவும் உண்மை யறியாமையையே புலப்படுத்தியதா மென்க. "அச்சிவஞ் சிருட்டித்து அதுவே புகுந்தது" "அந்தவொன்றே சர்வபூதங்க ளூடுமிருப்பது" "சிவமொன்றே சசியொப்ப அநேக அந்தக்கரணங்களிற் பிரவேசித்துள்ளது" "இச்சீவவடிவமாய்ப் பிரவேசஞ்செய்து" "அவனே இச்சரீரத்திற் பிரவேசித்தனன்" "அவன் இந்த எல்லையை [பிரமரந்திரத்தைப் பிளந்து கொண்டு இதன் வழியாய் உள்ளே (ஜீவரூபமாய்ப்) பிரவேசிக்கின்றனன்.] என்பன முதலிய அளவிறந்த சுருதிகளும் "சிவஜ்ஜீவோ ஜீவோசிவ சற்ஜீவோ கேவலசிவா, ஜீவோ சிவோ சிவோஜீவா சற்ஜீவோ கேவலசிவா என்பன வாதிய, சைவாகம வாக்கியங்களும்,

"சிவன்றான் பலபல சீவனுமாகி" யென்பனமுதலிய திருமந்திராதிகளும் நுதலிய உண்மையை இனியேனுங் கடைப்பிடித்துச் சிவனன்றிச் சீவனும் பாசமும் இல்லையென மதித்துக்கொள்க. பாச மநித்தியமென்பதற்கு முன்பே பிரமாணங்காட்டியுள்ளேம். ஆதலின் மகாதேவத்ரோகம் வாராமற் காத்துக்கொள்வான் அவர்க்கபிமதமேல் மகாதேவனைத்தவிர்த்து அணுவும் வேறுண்டென்று கனவினுங் கருதா தொழிவாராக.

அது சிருட்டித்து அது புகுந்ததென்னின்வேறொன்று வரற்கு யாது காரணம்? கடஞ்செய்யின் விண்புகுந்து கடாகாயப்பெயர்வரின் கடகம் மகாகம்மைவிட்டயலாமா? மதிமான்கடான் அங்ஙன் கருதுவரா? இது விஷயம் நன்கூகித் தமைவாராக. இதனை நன்கறிய விரும்பின் வேதசாரசமுத்தாரணாதி நூல்களை ஆராய்ந்தறிக. இது நிற்க "ஞானகாண்டமாகிய உபநிடத வித்தியா விஷயத்திற்காணப்படும் சிரோவிரதம் என்றதைக் கர்ம காண்டத்துக் காக்கித் தீச்சட்டி என்று கோளசங்கரர் எழுதினமை தவறுமென்க." என்றார். உபநிடதவித்யா விஷயமென்றாரேயன்றிச் சாதனமா? சாத்தியமா? என நுதலிய விடத்தையும் மற்ற காரணங்களையும்நோக்கினாரில்லை.

இவர் முண்டகோப நிடதத்தில் மூன்ருவது முண்டகத்தில் இரண்டாவது கண்டத்திற் பத்தாவது மந்திரத்தில் பிற்பாதியாய "தேஷாமேவைதாம் பிரஹ்ம வித்யாம் வதேத சிரோவ்ரதம் விதிவத் யைஸ்துசீர்ணம்" என்பதின் மாட்டுள்ள சிரோ வ்ரத சப்தத்திற்குத்தான் எமது கருணுமூர்த்தியாய ஸ்ரீசகுரு சங்கர முனிவர் தப்புரை செய்ததாகத் தொடுத்தது. அதன் பொருளோ:—தேஷாமேவ - அவர்கட்கே, ஏதாம்பிரஹ்மவித்யாம் - இது காறுமறைந்த பிரஹ்மவித்தையை, வதேத-அருளிச்செய்க, யைஸ்து-எவர் தம்மாலே, விதிவத்-விதிப்படி, சிரோவ்ரதம் சீர்ணம்-சிரோவ்ரதமாற்றப் பெற்றுளதோ ; சிரத்தின் அக்கினிதாரணவடிவதைச் சிரோவ்ரதமென்ப, அஃததர்வணர்க்குப் பிரசித்தமாய வேதவிரதமாம்.

அச்சிரோவிரதம் முற்றியோர்க்கே இஃதத்தியயனிக்கப்பாலதாதலின் இதற்குமுண்டகமென மொழியப் பெறும். இதனுனே சிரோவிரதமில்லவர் இம்முண்டக விசார அருகரல்லர் எனப்பெறலாயதாம். பெறவே, இத்தகைய அதர்வணர்தம் பிரசித்த சிரோவிரதத்தை அவர் வேருய் மருண்டுகண்டது மன்றி ஸ்ரீசங்கர பாடியமுங் குற்றமென்று கூறப்புகுந்தனர். பூர்வாபர

விசாரசிலர் இதனையுய்த்துணர்ந்து அவர்த மாழ்ந்த நுண்மதியை இவ்வளவிற்றென மதிப்பாராக.

இஃதிங்ஙனமாக அவர் "பிரமகீதா சுலோகங்களையும், முக்கிய சுருதிப் பொருள்களையும், பிரம சூத்திரப் பொருள்களையும் ஒரு புரட்டாய்ப் புரட்டிச் சிவபரதத்துவத்தை மாற்றித் தமது ஆன்ம பசுப்பிரமத்துக்கேற்றித் தூஷிக்குஞ் சந்நியாசியாரும்" என்றதோடு நில்லாமல், "இச்சந்நியாசியாருக்கு முற்பட்டோரும், பிற்பட்டோருமாகிய எல்லாவைதிகருமே வேதமர்த்தீசி முதலாயினோர் சாபத்துக்கு இலக்காய் நின்றவராம் என்க" என்று தமது வச்சிரதண்ட 26-வது பக்கத்துட் கூறி அதற்கு மூலமாய் 30-வது பக்கத்தில் "மகாபாதகிகளை நிகர்த்து வேதபாகியர்களாய் ஆவார்களென, அவர்களனேகமாய்ச் சாபத்தினால் மீட்டு மீட்டும் பிறந்து (மாயாதத்துவ) உருத்திரரையும் நாராயணரையும் ஸ்தோத்திரஞ் செய்தார்கள்; அப்போது மோகசாஸ்திரங்களைச் செய்வோம் என்று மாதவராகிய முராரியினால் உருத்திரர் வேண்டப்பட்டும் கேசவர் உருத்திரரால் உனூற்றப்பட்டும் மோக சாஸ்திரங்களைச் செய்தார்கள். காபாலம் இலாகுலம் வாமம் பைரவம் பாஞ்சராத்திரம் பாசுபதமுதலிய மற்றைய ஆயிரக்கணக்காய (மோகசாஸ்திரங்களை) உண்டாக்கினு

ர்கள் என்று கூர்மபுராண பூருவபாகத்து 16 ஆம் அத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது" என்றார். அன்றியு மதே பக்கத்தில் "பாஞ்சராத்திரம் காபாலம் காளாமுகம் சாக்தம் என்பவற்றில் தீக்ஷிக்கப்பட்டு நீங்கள் பிராமண அதமர்களாவீர்களாக; பவுத்தம் ஆருகதம் பாசுபதம் சாம்பவம் என்பவற்றில் தீக்ஷிக்கப்பட்ட நீங்கள் பிராமண அதமர்களாகுக என்று சூதசங்கிதையிற் கூறப்பட்டமையின் என்றார்" தட்டிப்பேச ஆளில்லாவிடிற் றம்பி சண்டப் பிரசண்டன் என்றவாறு இவர் கேட்பாரில்லை யெனவும் பார்ப்பாரில்லை யெனவுங் குதித்தனர். அக்குதியைச் சற்றடக்கிக் கால்வலியை மாற்றிவைப்பாம்.

அஃதெங்ஙனமாங்கொலோ வெனினிங்ஙனமாம்:— முன்னிருபத்தாறுவது பக்கத்தில் பிரமகீதா சுலோகங்களையும் முக்கியச் சுருதிப்பொருள்களையும் பிரமசூத்திரப்பொருள்களையும் ஒரு புரட்டாய்ப்புரட்டிய முற்பட்டார் பிற்பட்டாரென வைதிக அத்வைதிகளைக்கவுதமததீசி சாபத்திற்கியாதொரு பிரமாணமுமின்றி யிலக்காக்கினார்;பின் முப்பதாவது பக்கத்தே அதற்கு முராணய்க் காபாலிகரையும் இலாகுளாபிமானியரையும் வாமரையும் பைரவரையும் பாஞ்சராத்திரரையும்பாசுபதரையும் காளாமுகரையும் சாக்தரையும் பவுத்தரையும் ஆருகத

ரையும் சாம்பவரையும் அச்சாபத்திற்கிலக்காக்கினு ரள வைகொண்டு. இதை மதிமான்கள் ஒரு வாருயினவர்க் கே அவர் நுண்மதிபுலப்படுமாதலின் யாமெடுத்துக்கா ட்டாதித்துணேயோடு விடுத்தேம். நீவிரும் மறைபட்ட பவுத்தர் தாமே ஆதலின் உட்பட்டீரெனின்? மகாதே வைப்பூரணமாயொப்பி அச்சிவனேயொழித்தனுவுமில்லை யென்னும் யாம் பவுத்தரா அல்லது சிவத்தை யபரிபூர ணமாக்கி யழித்துச் சூனியவாதியாம்இவரா?மேன்மக்க ளே நீவிரே இவ்வுண்மையைக் கூறுமின்; ஏன் நும்மை வினவலோவெனின் நம்மன்பருக்கு நடுநிலை தெரியாத தாற்ருன்; அதுவும் மதமாற் சரியத்தாலென்க. அன் றியும் ரிபுமுனிவர் வசிட்டமகரிஷி அஷ்டவக்கிரமகரிஷி அவதூதராய தத்தாத்திரய மகரிஷி வியாசமுனிவர் என்னுமெண்ணிறந்த அத்வைத நூலாசிரியர்பவுத்தரா ம்போது யாம் பவுத்தராவேம். இவரீசனைக்கொன் றிப் போதே பவுத்தராகின்றனரே யிதற்கென் செய்வது பரிதாபம்! பரிதாபம்!!

மேலும், அவ்விருபத்தாருவது பக்கத்தின்மாட் டே "இந்தச் சைவ உபநிடதங்கள் கோளசங்கரரால் மாற்றிப் புதுக்கப்பட்ட பிரமகீதை யொழிந்தமற்றைச் சிவபுராணங்களாற் பொருள் துணியப்படும்" என்ருர். என்னின் கூர்மபுராணம் ஈசுரகீதையைக்கொண்டு துணி

யலாமா? அல்லது சூதகீதையைக்கொண்டு துணியலாமா? அல்லதெந் தயாகிதியாகிய ஸ்ரீகணேசப்பெருமான் கீதையைக்கொண்டு துணியலாமா? ஏதேனு மொன்றை வரையறுத்துக்கெண்டிவர் துணியப் புகுந்து வரையி னஞ்ஞான்றன்றே அவர் தம் சங்கராபவாதம் வெளிப் படும். இதனை மறவாது முயல்வாராக.

இனி "சோத்வன: பாரமாப் நோதிதத்விஷ்ணோ: பரமம்பதம்" அவன் (அறவித) அத்துவாவின் கரைக் கண்ணதாகிய சிவனாது பரமாகாய பரமபதத்தையடை கின்றான்" என்று கடவல்லி யுபநிடதம் 3 - 9. திறுக் குக் கசடுரை விரித்ததுமன்றிக் கேரள சங்காரு முபப் பிருங்கணங்களுக்கு மாறுபட அத்துவா என்பதிற்குச் சம்சாரகதி என்று பொருள் கூறினமை" யென்று குற் றமுஞ் சொற்றார்.

இதுவும் பூர்வாபரபரியாலோசனையின்மையையே புலப்படுத்தியதாமென்க. என்னை? அதே 3-வது வல் லி, 7-வது மந்திரத்தில் "யாவன் அவிஞ்ஞான வானு வனே தன்வயப்படுத்தாதமனத்தனே அவன் சந்தத மசுசியாவன்; அவன் அப்பதத்தை யடையான்; மற்றே சம் சாரஞ்ச அதிகச்சதி - சனனமரண வடிவசம்சாரத் தை யெய்தாநிற்பன் எனறுதலி, 8-வது மந்திரத்

தில் "யாவன் விஞ்ஞானவானோ தன் வயப்படுத்திய மனத்தனோ அவன் சந்ததம் சுசியாவன் அவன் அப்பதத்தை யடைவுறுவன் எதனாற் பிறப்பு மீண்டு மின்றாமோ எனநுதலி அப்பதமியாதென வினவா, அவர் காண்பித்த 9-வது மந்திரத்தில், யாவன் விவேகமதிச் சாரதியுடையான் தன் வயப்படுத்திய மனத்தனுயான் யாவனோ அவன் அத்வன: பாரம் - முன்னுதலிய சனனமரணவடிவ சம்சாரகதியின் கரையாய, முன்னுதலிய வியாபகமாய அக்ஷரப்பிரஹ்மப்பரமபதத்தை யடைவுறுவன். சர்வ சம்சார பந்தனங்களினின்றும் விடுபடுவன் என்பது கருத்தாம். முற்றொடர் பாய 7-வது 8-வது மந்திரங்களின்றொடர் பறியாது இவர் உபபிருங்கணங்களுக்கு மாறாய்ச் சங்கரர் பொருள் கூறினரென்று தூஷித்தது எத்திற மாமென்ப திதைக்காணு மறிஞரே யறிவர். 'கூரையேறிக் கோழிபிடியாதா வானமேறி வைகுந்தஞ் செல்வன்" என்னும் உலகவுரைக்கொப்பமுன் னதிசமீபத்தேகிடந்த 7-வது 8-வது மந்திரங்களை யுணர்ந்து பொருள்கோட வலியிலா இவர் தாமா உபபிருங்கணங்களைத்தேடிப் பொருள் கோடுஞ் சமர்த்தர்.

"முட்ட முன் குனி" என்னுமொழிப்படி பேனை வைக்கும் போதே சற்றாலோசித்து வரையின் இப்படி

என் மாட்டிக்கொண் டிடர்ப்படவேண்டும். இன்னுஞ் சிலபலசிறுவினுக்களுக்கு மிவற்றின் கண்ணே விடை கண்டடங்குவா ராக. அற்றேல் சிவாகமங்களைப் பற்றி யும் அவற்றாற் பிரதிபாத்தியமாய ஆதிசைவ சிகாமணி களைப்பற்றியும் யாதும் வரையாத தென்கொண்டோ வெனின்? எமக்குச் சிவாகமங்கள் பரமப்பிரமாணமாத லினுனும், அவற்றாற் கூறும் ஆதிசைவ சிகாமணிகள், "முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார்க்கடியேன்" என எமது பரமாசிரியராகிய சுந்தரப்பெருந்தகையருளிச்செ ய்திருக்கின்றமையின் எம்மனோராற் போற்றற் குரிய ரேயாதலினுனும் எமக்கு நிந்தித்தல் உடன் பாடன் மையானும் ஈண்டு சிற்சில விடத்தே மங்கிவிடல் மருளல் முதலிய பதங்களின் பிரயோகமினி யித்தகைச் செயலைச்செயா திருப்பா னறிவுறுத்துவானே வரைந்த மையானும் எடுத்துக்கொண்ட விடயமஃதன்மையானு மென்க.

இந்நூலை ஸ்ரீசங்கர முனிவரை நிந்தித்துக்கொண் டுயிர்வாழும் பண்பினர் சிரவணிக்கில் நிந்தைக்கேது வாய துவேஷத்தை விடுத்து இனியத்தகைப்பிரவிருத்தி யைச் செய வாயெழா தடக்கு மாற்ற லிந்நூற் குண் மையின் இதனுக்கு ஸ்ரீசங்கரத்துவேஷியரின் வாய்ப்பூட் டென்னும், இதில் அனேக அத்வைதார்த்தங்களை விள

க்காட்டியிருத்தலி னிதனுக்கு ஸ்ரீஅத்வை தார்த்தப் பிரகாசிகையென்றும் பெயரீந்தாம்.

இதன் பயன் யாதுகொலோவெனின்? மத வாதியர் இனிச் சங்கரரை ஸ்ரீமகாதேவ அனுக்கிரக லீலா விக்கிரகமெனக்கொண்டு அப்பெருமானுற்றி யருளிய நூல்களில் சிரத்தைவைத்து அதனை யுணர் வான் அருளிறையைத் தேடிச்சென்றடைந்து முறை யே முத்தியுறலாம். அதிகாரியரோ மதவாதிகள் கல க்குங் கலக்கத்தான் மயங்காது தீக்ஷிதயோகியர் வாக்கி யம் ஸ்ரீகண்ட சிவாசாரியர் வாக்கிய முதலியவற்றை நுண்மதிகொடுகேட்டுங் கண்டும் ஐயமொழித்துப் பர மானந்த மோக்ஷபதமடையலாம். இவரும் மற்று ரும் நன்மையடைவான் வரைந்த இந்த ஸ்ரீஅத்வைதார் த்தப் பிரகாசிகை யென்னும் ஸ்ரீசங்கரத்வேஷியரின் வாய்ப்பூட்டின் முதற்பாகம் முடிபினை யெய்தியது. சுபம். சுபம். சுபம்

அத்வைதார்த்தப் பிரகாசிகை.

முதற்பாகம்

முற்றிற்று.



# பிழை திருத்தம்,



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 16 | 1 | மங்வி | மங்வீ |
| 34 | 7 | பவ | மவ |
| 37 | 3 | துள | துற |
| 45 | 1 | யோரததா | யோரபி, ததா |
| 52 | 9 | வயாா | வாயா |
| ,, | 10 | காமே | கவாமே |
| ,, | 19 | யேன்ரும் | யேயன்ரும் |
| 54 | 16 | கிலேயே | கிலேய |
| 55 | 11 | துவித்த | துவிதத்த |
| 56 | 1 | ரெப்பு | ரொப்பு |
| 59 | 3 | உபாதன | உபாதான |
| 60 | 5 | சங்கா | சங்கர |
| ,, | 7 | சாதனே | சாதன |
| ,, | 13 | காடா | கடா |
| 63 | 3 | வுறழ் | வுறழ |
| 67 | 9 | சித்தி | சித்வி |
| 75 | 10 | பரி | அபரி |
| 75 | 21 | பிர் | அபிர் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 33 | 8 | பெருள் | பொருள் |
| 34 | 16 | சுதந்தரம் | சதந்தரம் |
| 35 | 12 | யானு | யான |
| 36 | 10 | கின்ருேன் | கின்றேன் |
| 42 | 15 | பெரிய | பெயரிய |
| 43 | 21 | சிரௌத | ஶ்ரௌத |
| ,, | 22 | பக்தனு | பக்தானு |
| 44 | 4 | ப்ரிதா | ப்ரீதா |
| 50 | 6 | துணி | துண |
| 78 | 10 | கிவா | சிவா |
| 87 | 81 | ஙங்கள் | ஙந்தங்கள் |
| 94 | 6 | வ்பப | வ்யப |
| 101 | 18 | கருக்து | கருத |
| 103 | 21 | ணனுய | ணனுய |
| 104 | 6 | கடார | கடாஹ |
| 105 | 17 | பதான | பாதான |
| 106 | 18 | பிரம்ம | பிரஹ்ம |
| 113 | 17 | ப்ரஹ | ப்ரஹ் |
| 120 | 4 | என்றீரீ | என்றீரே |
| ,, | 11 | யதை | அதை |
| 140 | 13 | டிபு | டிப |
| 142 | 18 | அகீர் | அகிர் |



# லோகோபகாரி.



இது வாரந்தோறும் பிரசுரமாகுந் தமிழ்ப் பத்திரிகை; **16** வருடகாலமாகச் செவ்வனே நடைபெற்றுவருகின்றது. இதில் வேதாந்த, தருக்க, வியாகரண, புராண, இதிகாச, சுதேச விதேசிய, கைத்தொழில், கல்வி முதலிய அரிய பெரிய விஷயங்கள், சிறுவர் சிறுமிய ரியாவருக்கும் பயன்படுமாறு செவ்வியநடையி லெழுதப்பட்டுவருகின்றன. இது சிங்கப்பூர், பினங், பர்மா, சிலோன், தென் ஆப்பிரிக்கா முதலியபிரதேசங்களிலும் உலாவி வருகின்றது.



சந்தாவிவரம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| இந்தியாவிற்கு ... | ஒரு வருடத்திற்கு | 3 | 4 |
| மோரிசு, சிங்கப்பூர் முதலிய பிறதேசங்கட்கு | ,, | 5 | 0 |
| சென்னைக்கு ... ... | ,, | 3 | 0 |

☞ கோ. வடிவேலுசெட்டியார்,
பத்திராதிபர் - பத்திராசிரியர்,
கோமளேசுவரன் பேட்டை,
சென்னை.

சச்சிதாநந்தம் பிரஸ், 15—8—11.